பகிர்ந்து கொள்ளுங்கள், பாசமிக்க கணங்களை,
நேசமிக்க உணர்வுகளை. பகிர்ந்து கொள்ளுங்கள்,
குடும்பத்தினர் எப்போதும் விரும்பும் புத்துணர்ச்சி
நறுமணத்தை...




பாண்ட்ஸ்
ட்ரீம்ஃபிளவர்
டால்க்

HTA 7010

புதுமையின் நறுமணம். இதற்கு ஏது இணை!

# செருப்பு வீச ஒரு 'செட் அப்'

தளபதி திடமதி:

தலைவர்: என்ன திடமதியாரே, நம்ம கட்சி ஊர்வலத்துக்கு எக்கச்சக்கமாய்ப் போலீஸ் பந்தோபஸ்து ஏற்பாடு செய்திருக்கீரே, எதுக்கு?

திடமதி: எல்லாருக்கும் பணம் கொடுத்து அழைச்சிட்டு வந்திருக்கேன். பாதில நழுவிப் போயிடாதிருக்கத்தான்!

— ஒய். கே. சங்கர், சென்னை — 4.



தலைவர்: இன்னிக்கு நடக்கவேண்டிய பொதுக் கூட்டத்தை ஏன் தள்ளிப் போட்டுட்டீங்க?

திடமதி: லாரி ஸ்ட்ரைக் இல்லையா, அதனால்தான்!

— ச. சுப்பிரமணியன், சென்னை — 10.



திடமதி: கூட்டம் நடக்கும் போது உங்களை நோக்கி ஒரு செருப்பு வீச ஏற்பாடு செய்திருக்கேன்!

தலைவர்: ஐயய்யோ, எதுக்கு?

திடமதி: அந்தச் செருப்பை நீங்க ஏலத்தில் விட்டால் தேர்தல் நிதிக்குக் கணிசமான தொகை கிடைக்கும்! கட்சிக்கு நல்ல விளம்பரமும் கிடைக்கும்!

— க. ரவீந்திரன், ஈரோடு.



தொண்டர்: மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் என்னங்க வித்தியாசம்?

திடமதி: இது தெரியாதா? இவங்க அண்ணா சிலைக்கு மாலை போட்டு ஆட்சியை ஆரம்பிப்பாங்க; அவங்க காந்தி சிலைக்கு மாலை போட்டுட்டு வந்து ஆட்சியைக் கலைப்பாங்க!

— லதா ஞானசேகரன், இராமநாதபுரம்.

• எந்தப் பக்கம் போனாலும் பாலம் கிடையாது.

# 21-ம் நூற்றாண்டை நோக்கி...

**பிரதமர் அடுத்த நூற்றாண்டை நோக்கிச் சென்று கொண்டிருக்க, புலிப்பாறைப்பட்டி மற்றும் சுற்று வட்டார கிராம மக்கள் தங்கள் தங்கள் ஊருக்கு இன்றும் நீரில் நீந்தியே சென்று கொண்டிருக்கிறார்கள்!**



• ரவீந்திரன்: ''தண்ணீர் தண்ணீர் மாதிரிதாங்க...''



• பெருமாள்சாமி: ''ஊர் முன்னேற்றமே போச்சு...''

**நா**ம் அத்தனை பேரும் ஒட்டுமொத்தமாகப் பிரதமர் ராஜீவ் காந்தியின் கையைப் பிடித்துக் கொண்டு, படுவேகமாக இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் இந்தச் சுபயோக சுப வேளையில், அபசகுனம் மாதிரி ஒரு கிராமம். புலிப்பாறைப்பட்டி என்று பெயர். அதற்கு எந்த வழியாகச் சென்றாலும் நீந்தித்தான் போக வேண்டும் என்றால் நம்ப முடிகிறதா? நம்பித்தான் ஆக வேண்டும்.

'நீங்கள் மாதம் ஒரு மாவட்டம்' என்ற திட்டத்தின் கீழ் பஸ் போகாத கிராமங்கள், கார் கூடச் செல்ல முடியாமல் கால் நடையாகவே செல்ல வேண்டிய கிராமங்கள் என்று ஏராளமாக எழுதியிருக்கிறீர்கள். ஆனால்

இதுவரை நீங்கள் எந்தக் கிராமத்திற்கும் நீச்சலடித்துக் கொண்டு சென்று வந்ததாக எழுதவேயில்லை. எங்கள் கிராமத்திற்கு வந்து சென்றால் அந்தக் குறையும் உங்களுக்கு நீங்கும்' என்று கொஞ்சம் தமாஷாகவே எழுதியிருந்தார் புலிப்பாறைப் பட்டியைச் சேர்ந்த இளைஞர் ரவீந்திரன்.

போனோம்.

சிவகாசியிலிருந்து ஆலங்குளம் செல்லும் பஸ்ஸில் ஏறிக் காக்கிவாடன் பட்டியில் இறங்கிச் சுமார் இரண்டு கி. மீ. நடை. புலிப் பாறைப்பட்டி ஊர் எல்லையை அடைந்த போது மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து ஓடி வரும் காயல் குடி ஆறு குறுக்கிட்டது. அதுவொரு சிற்றாறுதான் என்றாலும் நில அரிப்பைத்தடுக்கவும் நிலத்தடி நீரைப்பெருக்கவும் ஆற்றின் குறுக்கே ஆங்காங்கே செக் டேம்களைக் கட்டியிருந்ததால் மார்பளவுக்கு மேல் தண்ணீர். எப்படிச் செல்வது?

இக்கரையில் நாங்கள் தவித்துக் கொண்டிருந்த போது, ''வாங்க சார்...!'' என்று ஒரு குரல்.

அண்ணாந்து பார்த்தபோது எங்களை வரவேற்பதற்காக வந்திருந்த ரவீந்திரனும் மற்றும் சிலரும் அக்கரையில் நின்று கொண்டிருந்தார்கள்.

''எப்படி வர்றது ரவீந்திரன்?''—சப்தமாகக் கேட்டோம்.

''கவலைப்படாதீங்க... அப்படியே கரையோரமாகவே வாங்க, கொஞ்சம் தூரத்தில ஒரு ரயில்வே பாலம் ஒண்ணு இருக்கு. அது வழியா வந்திடலாம்...'' என்று அவரும் சப்தமாகக் கூறிக் கொண்டே அக்கரையோரம் நடந்தார்.

நாங்களும் இக்கரையில் நடந்தோம். ரயில்வே பாலம் வந்தது.

''பாலத்தில பார்த்து நடங்க... ஸ்லீப்பர் கட்டைங்களுக்கிடையில காலை விட்டுட்டீங்கன்னா ஆபத்து... இப்படி மாட்டிக் கைகால் போனவங்க எங்க ஊர்ல ஏராளம்...'' என்றார், அவர்.

''உண்மையிலேயே உங்க ஊருக்கு வர்றது சிரமம்தான் ரவீந்திரன்...''

''இப்படித்தாங்க கலெக்டர் வந்து பார்த்தப்போகூடச் சொன்னாரு. உடனே கவனிக்கறேன்னாரு: டி. ஆர். ஓ. கிட்டே பேசறேன்னாரு... டி. ஆர். ஓ. தாசில்தார்கிட்டே பேசினாரு... தாசில்தார் பி. டி. ஓ. கிட்டே பேசினாரு... பி. டி. ஓ. எங்க சேர்மன்கிட்டே பேசினாரு... சேர்மன், 'என்ன செய்யறது? நம்ம யூனியன்ல பாலம் கட்டற அளவுக்குப் பணமில்லையே' ன்னுட்டாரு... எல்லாம் 'தண்ணீர் தண்ணீர்' படத்திலே வர்ற மாதிரி தாங்க... யார்கிட்டே மனுக் கொடுத்தாலும் பிரயோஜனமில்லீங்க...'' என்றார் ரவீந்திரன்.

''இதைத் தவிர உங்கள் ஊருக்கு வர வேறு வழியே இல்லையா?''

''இல்லாம என்னங்க? அந்தப் பக்கம் மாதாங்கோவில்பட்டியில் இறங்கியும் நடந்து வரலாம். அங்கும் இடுப்பளவு தண்ணீருள்ள ஓடைக்குள் இறங்கித்தான் வந்தாகணும். இன்னொரு பக்கம் திருவேங்கடபுரம் வழியாகவும் வரலாம். அப்படியும் கண்மாய்க்குள்ள இறங்கித்தான் வந்தாகணும். நனையாம வரணும்னா இந்த ரயில்வேப் பாலம் ஒண்ணுதான் வழி. இப்படி இந்தப் பாலத்தில, ஒரு முறை எங்க ஊருக்கு வந்த புது மாப்பிள்ளை ஒருத்தர் ராத்திரியானதால் கால் தவறி ஸ்லீப்பர் கட்டைகளுக்குள்ள மாட்டி

* சீனியம்மாப் பாட்டி: ''விருந்துக்கு வந்த மாப்பிள்ளைங்க...''



* ரயில்வேப் பாலம்: கத்திமேல் நடக்கிற மாதிரி...





சீதாராமன்: ''விமோசனமே இல்லைங்க...''



பெருமாள்சாமி: ''எலெக்ஷனைப் புறக்கணிக்கப் போறோம்...''

விழுந்து செத்துப் போன கதையும் உண்டு. ஆனாலும் என்ன செய்ய? நாங்க இதைத்தான் உபயோகப்படுத்த வேண்டியிருக்கு....'' என்றார் ரவீந்திரன்.

''நாங்க சிவகாசிக்குத்தாங்க பாலைக் கொண்டுபோய் வித்தாகனும். இந்தநிலையில எப்படிப் போவது? விடிகாலைல சைக்கிள் களில் பால் கேன்களைக் கட்டிக் கொண்டு இந்தப் பாலத்து மேலதாங்க தினமும் உயிரைக் கையில பிடிச்சுக்கிட்டுச் சைக்கிளைத் தள்ளிக்கிட்டுப் போறோம்...'' என்றார் திருவேங்கடராமானுஜம்.

''எங்க ஊர்ல அஞ்சு கோழிப் பண்ணைங்க இருக்கு. தினமும் நாலாயிரம் முட்டைகளை இப்படித்தாங்க கொண்டு போறோம். பல சமயங்கள்ல ஆளோட சேர்ந்து முட்டைகளும் தண்ணிக்குள்ள விழுந்து வீணாகிப் போன கதைங்களும் ஏராளம்... ஊர் நெலத்தில வெளையற பருத்தி. காய்கறிங்களையும் இப்படித்தான் கொண்டு போறோம்... விமோசனமே இல்லை...'' என்றார் சீதாராமன்.

''எங்க ஊர்லயே கிட்டத்தட்ட பத்துத் தீப்பெட்டித் தொழிற்சாலைங்க இருக்கு. சரக்கை ஏற்றிக்கொண்டு எப்படிக் கொண்டு போறோம்ங்கறீங்க? இப்படித்தான் லாரியைக் கொண்டுக்கிட்டு வந்து அக்கரையில நிறுத்திட்டு, இக்கரையில இருந்து சரக்குகளை இந்த ரயில்வேப் பாலம் வழியாத்தான் எடுத்துக்கிட்டுப் போய் லாரியில ஏத்தறோம். அதனால செலவு அதிகமாகுது. யார் கவனிக்கறாங்க? எங்க ஊர்த் தீப்பெட்டித் தொழிற்சாலைங்களால மட்டும் அரசாங்கத்துக்கு வருஷா வருஷம் கிட்டத்தட்ட மூணு லட்ச ரூபாய் எக்ஸைஸ் வரியாக் கிடைக்கிறது. ஆளுங்களும் வாகனங்களும் போற மாதிரி பாலம் கட்டிக் கொடுத்தாங்கன்னா எங்க ஊரு இன்னும் எவ்வளவோ முன்னேறும்ங்க...'' என்றார் தீப்பெட்டித்தொழிற்சாலை நடத்தும் பெருமாள்சாமி.

**ஊ**ருக்குள் சென்றோம்.

''எங்க வூட்டுக்கு விருந்துக்கு வந்த புது மாப்பிள்ளைதாங்க அந்தப் பாழாப் போன பாலத்தில விழுந்து போய்ச் சேர்ந்தாரு...'' என்று பழைய துக்கத்தைச் சொல்லிப் புலம்பினார் சினியம்மாப் பாட்டி.

''நான் பக்கத்திலிருக்கிற சங்கரபாண்டியபுரத்தில ஸ்கூல் டீச்சரா இருந்தேங்க. இந்தப் பாதைப் பிரச்னைல நொந்து போய்க் கடைசில வேலையையே ராஜினாமாப் பண்ணி விட்டேங்க...'' என்றார் இன்னொரு சினியம்மா.

இப்படி ஊர் மக்கள் அனைவரும் ஒரு பொதுவான துக்கத்தில் புலம்பும் நிலைதான் ஒவ்வொரு நிமிஷமும்.

கடைசியாக ஊரின் பஞ்சாயத்துத் தலைவரான பெருமாள் சாமியைச் சந்தித்துக் கேட்டோம்.

''நாங்க கக்கன் காலத்திலிருந்தே மனுக் கொடுத்துக்கிட்டுத்தாங்க இருக்கோம்...'' என்றார் பெருமாள்சாமி.

''எம். எல். ஏ. வா இருந்தவங்க ஏதும் செய்யலையா? அவங்ககிட்டே நீங்க சொல்லலையா?''

''சொல்லாம என்ன? எங்க எம். எல். ஏ. வாக இருந்த பாலகிருஷ்ணன் (அ. தி. மு. க. — ஜெயலலிதா கோஷ்டி) போன தேர்தலுக்கு முந்தின தேர்தல்ல நின்னு ஜெயிச்சப்பவே பாலம் கட்டித் தர்றேன்னு தான் சொன்னார். செய்யலே. அதனால போன தேர்தல்ல வோட்டுக் கேட்க வந்தப்போ, 'பாலம் கட்டித் தர்றேன்னு சொல்லிட்டுத் தரலையே, எப்படி வோட்டுப் போடுவோம்?' னு எங்க ஊருப் பொம்பளைங்களே கேட்டாங்க. அதற்கு அவர், 'நேனு மீ கொடுகு மாதிரி. ஈ தடவை நாகு வோட்டு வெய்யண்ட அடுத்ததினு தடவை அர்த்தா சலுகைனு



ரங்கசாமி: ''ஆமாங்க... வாஸ்தவம்தாங்க...''



* தோப்பூர்: இந்த நிலத்தில் ஏதும் விளையாதாம்!

சேசேனு...' (நான் உங்கள் பிள்ளை மாதிரி. இந்தத் தடவை வோட்டுப் போடுங்கள்; செய்து விடுகிறேன்) அப்படீன்னு நாங்க பேசற தெலுங்கிலேயே பேசிப் பொம்பளைங்க வோட்டைத் தட்டிக்கிட்டுப் போய்ட்டாரு... செஞ்சாத்தானே? இதோ பாருங்க... இவர்தான் எங்க ஊரு எம். ஜி. ஆர். மன்றத்தின் துணைத் தலைவர் ரங்கசாமி. இவரும் ஜெயலலிதா கோஷ்டிதான்... பாலகிருஷ்ணனுக்கு வேண்டிய ஆள்தான். இவரே போய்ப் பல தடவை சொல்லியிருக்காரு... கேட்டாத்தானே? எதிர்லேதானே இருக்காரு... ரங்கசாமியை நீங்களே கேளுங்களேன்...''

கேட்டோம்.

''ஆமாங்க... தலைவர் சொல்றது வாஸ்தவம்தாங்க...'' என்றார் ரங்கசாமி.

பஞ்சாயத்துத் தலைவர் பெருமாள்சாமியே தொடர்ந்தார்......

''பாலம் இல்லாத குறை எங்க ஊர்ல இருக்கிற சுமார் ஆயிரம் பேரை மட்டும்

* முனியாண்டி: ''கட்டடங்களையா சாப்பிட முடியும்?''



பாதிக்கலீங்க... சுத்தியிருக்கிற சிவலிங்கம்பட்டி, ராமன்பட்டி, நெடுங்குளம், கொங்கன்குளம், ரெட்டிபட்டி, கோடாங்கிபட்டி, ஆத்தூர்... இப்படிப் பத்தாயிரம் பேருக்கு மேல பாதிக்கப்படறோம்ங்க. அதனால வரப் போற எலக்ஷன்ல யாருக்கும் நாங்க வோட்டுப் போடறதில்லேன்னு முடிவு செஞ்சிட்டோம்...''

''உங்களுக்குப் பாலம் ஒன்று அவசியம்தான் என்பதில் சந்தேகமேயில்லை. அது இதுவரை யாராலும் செய்து தரப்படவில்லை என்பதும் உண்மைதான். அதற்காகத் தேர்தல் புறக்கணிப்பு என்பது ஒரு ஜனநாயக நாட்டில் சரியான முடிவாக இருக்க முடியுமா?''

''சரியான முடிவு இல்லைதாங்க. ஆனா இதுவரைக்கும் வோட்டுப் போட்டு ஒரு பிரயோஜனமும் இல்லேங்கிற போது, இனி எதுக்குப் போடணும்? நானும் கட்சிகளுக்கு அப்பாற்பட்டவன் இல்லே. காங்கிரஸ்காரன்தான். அதுக்காக ஊர் ஜனங்களோட நன்மை முக்கியமா, இல்லே, கட்சி முக்கியமா? ஜனங்க நன்மைக்குத்தாங்க கட்சி. அந்த நன்மைக்கு எங்க கட்சி உள்பட எதுவுமே பாடுபடலேங்கிறபோது எதுக்காக வோட்டுப் போடணும்? எப்படிப் போட முடியும்? இதை எங்க காங்கிரஸ் கட்சியின் ஊழியர் கூட்டத்திலேயே நானும் மற்றவர்களும் சொல்லி விட்டோம். என்ன நடந்தாலும் சரி, வரப் போகிற தேர்தலில் நாங்கள் யாரும் யாருக்கும் வோட்டுப் போடப் போவதில்லை என்பது உறுதி!'' என்றார் பஞ்சாயத்துத் தலைவர் பெருமாள்சாமி.

**கா**மராஜர் மாவட்டத்திலுள்ள புலிப்பாறைப்பட்டி மற்றும் அதைச் சுற்றியிருக்கும் கிராம மக்களுக்குத்தான் இப்படிப்பட்ட கோபமும், தேர்தல் புறக்கணிப்பு எண்ணமும் என்பதில்லை. மதுரைக்கு அருகிலுள்ள தோப்பூர் கிராம மக்களுக்கும் அதே கோபமும் தேர்தல் புறக்கணிப்பு எண்ணமும் இருக்கிறது.



''டாக்டர்! என்னை ஏதோ ஒண்ணு பின்தொடர்ந்து வர்ற மாதிரி சதா ஒரு பிரமை...!''

''அது வேறொண்ணுமில்லே; நீங்க செய்த ஊழலாத்தான் இருக்கும்!''

— கடுவை கோபால்சாமி.

மதுரை நகரம் விரிவடைந்து கொண்டே வருவதால் குடியிருப்பு வசதிகளும் ஏராளமாகத் தேவைப்படுகிறது. அதனால் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் மதுரை நகரைச் சுற்றியுள்ள நிலங்களை ஆர்ஜிதம் செய்து வீட்டு வசதிகளைப் பெருக்கிக் கொண்டே வருகிறது. அந்த அடிப்படையில்தான் மதுரை—விருதுநகர் சாலையோரத்திலிருக்கும் தோப்பூர், உச்சம்பட்டிப் பஞ்சாயத்துக்களில் மொத்தம் 1686.13 ஏக்கர் நிலத்தை ஆர்ஜிதம் செய்யும் வேலைகளில் ஈடுபட்டுள்ளது வீட்டு வசதி வாரியம்.

''டவுன்காரங்க குடியிருக்கிறதுக்கு வீடு கட்டித் தர்றதில எந்தவித ஆட்சேபணையும் இல்லீங்க. ஆனா, நாங்க விவசாயம் செஞ்சு பொழைச்சுக்கிட்டிருக்கிற நெலத்தை எடுத்தா எப்படீங்க? எங்க தோப்பூர் பஞ்சாயத்தில மட்டும் எண்ணூறு ஏக்கர் எடுக்கறாங்க... அதில வெறும் எண்பத்தாறு ஏக்கரை மட்டும்தான், 'எடுக்காதீங்க... அதை நம்பித்தான் நாங்க விவசாயம் செய்யறோம்'னு சொல்றோம். மீதி நெலத்தை எடுக்கறதிலே எங்களுக்கு ஆட்சேபணையே இல்லே. நீங்களே வந்து பாருங்க சார்...'' என்று அழைத்துச் சென்று காண்பித்தார் தோப்பூர் நில உடைமைப் பாதுகாப்புச் சங்கத்தின் தலைவர் முனியாண்டி.

''பார்த்தீங்களா...? இந்தக் குளத்தில மழை பெய்யறப்போ தண்ணீர் வந்து தேங்கும். அதனால் அதையொட்டியிருக்கின்ற எங்கள் கிணறுகளிலும் நல்ல ஊற்று இருக்கும். கிணத்துத் தண்ணியை நம்பித்தான் இந்த எண்பத்தாறு ஏக்கரிலும் எங்க ஊர்க்காரங்க வெவசாயம் செய்யறோம். பார்த்தீங்களா இப்பக் கூட கடலே, பருத்தி, நெல்லுன்னு போட்டிருக்கோம்... இதைத்தான் அதிகாரிங்ககிட்டேயும் நாங்க எடுத்துச் சொன்னோம். முன்னாடி மதுரைக் கலெக்டரா இருந்த வரதராஜுலு நேர்ல வந்து பார்த்திட்டுப் போனாரு. கவனிக்கறேன்னாரு. நிச்சயம் கவனிச்சிருப்பாரு. ஆனா அதுக்குள்ளே அவரைத் தூக்கியடிச்சு மெட்ராசுக்குக் கொண்டு போயிட்டாங்க...

''பிற்பாடு நேர்ல வந்து பார்த்த அதிகாரிங்க, 'இந்த நெலம் நன்செய் நெலம்னு பாகுபடுத்தப்பட்டிருந்தாலும் சரியான சாகுபடி இல்லாததால் இதர நெலங்களைப் போல வீடு கட்டத்தான் உபயோகப்படும்'னு ரிப்போர்ட் எழுதிட்டாங்க. ரிப்போர்ட்டும் மெட்ராஸ் போயிட்டது.

''ஏங்க, நன்செய் நிலம்னா அது ஆத்துப் பாசனமுள்ள நிலம்தான்னு சொன்னா தஞ்சாவூரே தத்தளிச்சுக்கிட்டிருக்கே... ஆக, ஆத்தில தண்ணி வர்றதுக்கும் அதிகாரிங்க ஸ்டெப் எடுக்க மாட்டாங்க... கிணத்துப் பாசனத்தில பயிர் பண்ணிக்கிட்டிருக்கிற நெலங்களையும் விட்டு வைக்க மாட்டாங்க... இது என்னங்க நியாயம்?

''நாங்களும் இதை எடுத்துச் சொல்லாத அதிகாரிங்க இல்லே... அரசியல்வாதிங்க இல்லே... மெட்ராஸ்வரைக்கும் போய்ச் சொல்லிட்டோம். எல்லாருமே வெறும் கான்கிரீட் கட்டடங்களையும் கம்ப்யூட்டர்களையுமே சாப்பிட்டுக்கிட்டு உயிர் வாழற மாதிரிதான் பேசறாங்க. ஏங்க... மனுஷங்களுக்குச் சாப்பாட்டுக்காகிற தானியங்களை உற்பத்தி பண்ற விவசாயத்துக்குத்தானுங்களே முக்கியத்துவம் தரணும்? மத்ததெல்லாமே விவசாயத்துக்குத் துணையா இருக்கிற விஷயங்கதானே...? வள்ளுவரே சொல்லியிருக்காரே, அப்படி!

''என்னமோ போங்க... நாங்க மனு மேல மனுக் கொடுத்தும் ஒண்ணும் பிரயோஜனப் படலே. இதுவரைக்கும் நாங்க சாத்வீக முறையில மட்டும்தான் எங்க பிரச்னையை எடுத்துச் சொல்லியிருக்கோம். யாரும் கேட்கலே. அதனாலே இனிமே என்ன நடந்தாலும் சரின்னு போராட்டத்தில் கொஞ்சம் கடுமையாவே இறங்கலாம்னு இருக்கோம். அதன் முதல் கட்டமாகத்தான் வரப் போகிற தேர்தலைப் புறக்கணிக்கலாம்னு முடிவு எடுத்திருக்கோம். அதுக்கும் ஒரு விடிவு காலம் பொறக்கலேன்னா... இருக்கிற கையகல நெலத்தையும் பறிகொடுத்திட்டுப் பட்டினி கெடந்து சாகறதை விடப் போராடிச் சாகறதே மேல்னும் துணிஞ்சிட்டோம். வேற வழியே இல்லீங்க...'' என்றார்கள் முனியாண்டியும் மற்றவர்களும்.

இந்த நிலையில்தான் நம்மை இருபத்தோராம் நூற்றாண்டுக்கு அழைத்துச் செல்லப் போகிறாராம் நமது பிரதமர். ஆகா! பூசுற்றுவதற்கென்றே படைக்கப்பட்ட மாதிரி இந்தியர்களின் காதுகள்தாம் எத்தனை தோதாக அமைந்திருக்கின்றன!

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படமும், மற்ற படங்களும்: கே. வி. ஆனந்த்

உங்கள் குழந்தைக்கு ஊட்டுங்கள் காய்கறிகளின் சிறந்த சத்தூட்டத்தை!




# ஃபாரெக்ஸ்®-வெஜ்




## 6 மாதம் முதல்

புதிய ஃபாரெக்ஸ்-வெஜ். இது, வைட்டமின் வளம் செறிந்த காய்கறிகளான காரட், தக்காளி மற்றும் பச்சைப் பயற்றின் இயற்கையான ஊட்டச்சத்துக்களைக் கொண்டதாகும்.

இது, நன்றாக, முன்பே - பக்குவப்படுத்தப்பட்டது. ஆகவே இது, குழந்தையின் மென்மையான வயிற்றின் ஜீரண சக்திக்கு ஏற்றதாகும்.

**ஃபாரெக்ஸ்—சுவையுடன் வளரும் வழி**

GX/41/203 TML

# ஃபைப்ரோபிளெக்ஸ்

# குவில்ட்

**மெத்தைகள், தலையணைகள் மற்றும் குஷன்களின்**

**சுகத்தை அனுபவியுங்கள்**

**ஃபைப்ரோபிளெக்ஸ்**

ஓய்வு
நேரமெல்லாம்
சுகமயமாக்கிட
உங்களுக்கோர்
உறுதுணை
வாழ்நாள்
முழுதும்!




Manufacturers :



**BHARAT MOTORS**

**SALES & ADMINISTRATIVE OFFICE**

151, Mount Road, Madras-600 002
Phone: 861923/863250/865512
Tlx : 41-6136 BM IN

**FACTORY :**
Industrial Estate,
Pettai,
Tirunelveli-627 010
Tel : 23622
Tlx : 0433 225 BM IN

**DEALERS IN TAMILNADU**

**MADRAS CITY : ANNA NAGAR :** Ruskos, Ph : 613042 • **ANNA NAGAR EAST :** M.A. Varghese & Sons. Ph : 612984 • **BROADWAY :** Ramji Steel Furniture. Ph : 21986 • **CHETPUT :** Nathan Furniture House. Ph : 663962 • **CHROMEPET :** Alankar. Ph : 403972 • **EGMORE :** New Foam Palace. Ph : 566288 • **ROYAPETTAH :** Jaya Bharatham Furniture. Ph : 861384 • A.K.K. Traders. Ph : 843745 • Arasan Engg. Enterprises. Ph : 862020 • TANSI Sales Centre Ph : 862161 • **TAMBARAM :** Alankar. Ph : 403762 • **THOUSAND LIGHTS :** TANSI Sales Centre Ph : 860816

**COIMBATORE :** TANSI Sales Centre. Ph : 30755 • **CUDDALORE :** Mahalakshmi Traders, 22-A, Car St. • **CUMBUM :** Jeya Coirs. Ph : 466 • **ERODE :** Rani Furnitures. Ph : 78684 • **KARAIKUDI :** Saravana Associates, 116, Kallukatti West • **KUMBAKONAM :** Mathivanan & Co., Ph : 21311 • Lakshmi Furnitures, Ph : 20591 • TANSI Sales Centre Ph : 21605 • **MADURAI :** Joy Enterprises. Ph : 25558 • AR. AS. & PV. PV. Ph : 25231 • Raja Furniture, 12, West Avanimoola St. TANSI Sales Centre Ph : 43832 • **MANNARGUDI :** Royal Furniture Mart, 19, Municipal Bldg. VOC Road. • **MYLADUTHURAI :** K.V.S. & CO. Ph : 2785 • Maruti Rexine Centre, 112-A, First Floor, No. 2, Road. (Near Sundaram Theatre) • **NAGAPATTINAM :** Kaleeswari Enterprises. Ph : 744 • **NAGERCOIL :** Santhosh Agencies. Ph : 3216 • **NAMAKKAL :** Nirmal Enterprises. Ph : 2932 PP • **OOTY :** Meena Enterprises, 10, Municipal Buildings, MS Lane, Upper Bazaar Road. • **PARAMAKUDI :** M.S.K. Traders, 5/209-B, Shoukathali St. • **POLLACHI :** Sri Sakthi Agencies, Ph : 5096 • **SALEM :** Gupta Furnitures, Ph : 62065 • **SATHYAMANGALAM :** P.N.N. Enterprises, 388-D, Bazaar Main Road. • **THANJAVUR :** Vinoth Agencies, 1647, South Main St. • Sri Devi Agencies 1514, South Rampart. Opp : Thiruvalluvar Theatre • **TIRUNELVELI :** AR. AS. & PV. PV. Ph : 24541-3 • TANSI Sales Centre Ph : 23880 • **TIRUVANNAMALAI :** Jai & Co., Ph : 2988 • **TRICHY :** Jyothi Furnitures. • Ph : 26523 • **TUTICORIN :** Sathya Agencies, Ph : 20161 • **VELLORE :** Sabari Agencies, Shop : 2, Kartik Building, Near Sathuvachari Bus Stop. • **VILLUPURAM :** Siva Steel House, 172, Nehruji Road. • **VIRUDUNAGAR :** Raja Furniture, Ph : 4873 • Jebam Enterprises, Ramamoorthy Road.

**PONDICHERRY :** Home Decors. Ph : 4616 • Sundaram & Co., Ph : 4310 • Vinod Steel Agencies. Ph : 3168.

adsindia



# பூவுக்குள் பூகம்பம்

ஒரு சுமாரான கதையை எடுத்துக் கொண்டு கதையின் ஒவ்வொரு வாக்கியத்தின் முன்னும் ராணுவம், ராணுவம் என்ற வார்த்தையைச் சேர்த்துப் பூவுக்குள் பூகம்பமாக்கி இருக்கிறார் தியாகராஜன்.

இடைவேளை வரை ராணுவம். ராணுவம் ஆடுகிறது. ராணுவம் பாடுகிறது. ராணுவம் சண்டை போடுகிறது. ராணுவம் பாராசூட்டில் குதிக்கிறது. ராணுவம் கல், முள் பாதையில் ஜீப்பில் போகிறது. ராணுவம் மேப் வைத்துப் பார்த்துத் திட்டம் போடுகிறது. திகட்டத்திகட்ட ராணுவடாக்குமெண்டரியைக் கதைக்கு நடுவில் புகுந்து விளையாட வைத்துவிட்டார்கள்.

கதை என்ன என்று பார்ப்போம்.

தியாகராஜன் மிலிட்டரி ஆஸ்பத்திரி நர்ஸைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்ட கையோடு போருக்குப் போய் விடுகிறார். நர்ஸ் பார்வதியை வில்லன் சரண்ராஜ் பலாத்காரம் செய்துவிட, பார்வதிக்கு ஒரு குழந்தை பிறக்கிறது. போருக்குப் போன தியாகராஜன் இறந்து விடுகிறார். பார்வதி குழந்தையுடன் மாமனார் வீட்டில் தஞ்சம். சரண்ராஜ் மறுபடி ஸ்கிரீனுக்குள் வந்து பார்வதியை இன்னொரு தடவை, இன்னொரு தடவை என்று கேட்க, சரண்ராஜின் அம்மா, பழைய கதாநாயகி சரோஜாதேவி சுட்டுப் பொசுக்குகிறார். செத்துப் போனதாகச் சொல்லப்பட்ட தியாகராஜன் உயிரோடு வருகிறார். இருந்தாலும் தமிழ்ப் பண்பாட்டுப்படி பார்வதி இறந்து போகிறாள். தியாகராஜன் குழந்தையுடன் சூனியப் பார்வை பார்க்கிறார்.

ராணுவம் இல்லாமலே இந்தக் கதையைப் பண்ணியிருந்தால் எடுபட்டிருக்காது என்று நினைத்துக் கதையுடன் ராணுவத்தை ஒட்ட வைத்திருக்கிறார்கள். மற்றபடி, இந்திய ராணுவத்திற்கு இந்தப் படத்தால் ஏதாவது ஓர் இமேஜ் கிடைக்கும் என்று எதிர்பார்த்தால்... ஹி... ஹி...

ஜனகராஜ் ஜெயமாலினியை அழைத்துக் கொண்டு ஆடுவது புன்சிரிக்க வைக்கிறது. மற்றபடி ஜனகராஜுக்கு வேலையே இல்லையா...? மனிதர் படத்தில் இருக்கிறாரா, இல்லையா என்றே தெரியவில்லை.

செந்திலும் அவருடைய இணை பிரியா மாலைக்கண் நோயும், மனைவி கோவை சரளாவும் சேர்ந்து கொண்டு சிரிக்க வைக்கப் பார்க்கிறார்கள், அங்கங்கே, துண்டு துண்டாய்.

ஜூனியர் தியாகராஜனும், சீனியர் தியாகராஜனும் இணைந்து எதிரிகளைப் பந்தாடும் அந்தச் சண்டைக் காட்சி அபார நீளம்தான் என்றாலும் பரவாயில்லை.

தியாகராஜன் ஒவ்வொரு ஃப்ரேமிலும் தான் இருக்க வேண்டும் என்பதற்காகவோ என்னவோ ஸீனியர் தியாகராஜன், ஜூனியர் தியாகராஜன் என்று இரண்டு பாத்திரங்களாகப் பிரித்திருக்கிறார். படத்தின் தயாரிப்பாளரும் அவரேவா. எப்போதும் செலவுக் கணக்கைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிற மாதிரியான ஒரு முகபாவம். அவர் டெலிவரி செய்யும் வசனங்களில் ஜீவன் மிஸ்ஸிங். ரொம்ப ரொம்ப அடக்கி வாசித்து விட்டார்.

ஹீரோயின் பார்வதி தமிழுக்குப் புதுசு போலும். முகத்தில் பால் வடிவது இன்னும் நிற்கவில்லை. அதற்குள் ஹீரோயின். மாடர்ன் ட்ரெஸ்ஸிலும் சரி, புடைவையிலும் சரி... பாந்தமாக இருக்கிறார். முகபாவங்களை சுவிட்ச் போட்ட மாதிரி மாற்றுகிறார். கூடிய சீக்கிரம் உச்சாணிக் கொம்புக்குப் போவார் என்று எதிர்பார்க்கலாம்.

அந்த நாள் சரோஜாதேவிக்கு இந்தப் படத்தில் வேலையே இல்லை. ஒரு காலத்தில் தமிழ்ப்பட ரசிகர்களைப் பைத்தியமாக்கியவரா இவர் என்று எண்ண வைக்கிறார். சும்மா பொம்மை மாதிரி வந்துவிட்டு வந்து விட்டுப் போயிருக்கிறார். அவ்வளவுதான்.

பாடல்கள் பரவாயில்லை. Camp-fire பாட்டு ரசிக்கிற மாதிரி இருக்கிறது. காதல் பாடல்களும் கேட்கிற மாதிரி இருக்கின்றன. சங்கீதராஜனாமே இசை? பெயர் புதிதாக இருக்கிறது. புதியவர் என்றால் முன்னேற வாழ்த்துக்கள்.

க்ளைமாக்ஸில் மாமனார் தியாகராஜனும் மருமகள் பார்வதியும் காரில் போய் விபத்தில் சிக்குவதும், இங்கே சரோஜாதேவி சரண்ராஜை டுப் டுப் என்று சுட்டுக் கொல்வதும்— வெண்ணெய் திரண்ட நேரத்தில் தாழி உடைந்த கதை என்பார்களே — அதேதான். போட்டு உடைத்துவிட்ட மாதிரி ஓர் உணர்வு.

சிலுக்குக்கு ஒரு டீஸண்டான ரோல். புருவங்களை உயர்த்த வைக்கிறார்.

எல்லாம் சரி. படத்தின் நத்தை வேகத்தைத்தான் தாங்க முடிய மாட்டேன் என்கிறது.

— ஜெயமன்மதன்


காலிஸ்தான்,
தாள் கால்ஸா
இயக்கங்களுக்குத்
தடை!
எச்சரிக்கை!!
பஞ்சாப்
ரே
போர்டு எழுதிட்டேன்!
இனி பயங்கரவாதிகள்
பாச்சா பலிக்காது!


முதலமைச்சர் பதவி
ஹெக்டே




பூச்சாண்டி!...
புடிச்சுக்கோ!
பே.. பே. பே. எங்களோட
சேர்ந்துக்க! இல்லேன்னு
டெபாசிட் கோவிந்தா!


மேயர்
கட்சி
வளர்ச்சித்
திட்டங்கள்




# கல்கி

1988 மே 15
மலர் 46 இதழ் 42
விபவ வைகாசி 2




## ஹெக்டே பெற்ற வெற்றி!

தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வப் பார்த்து, அந்த முயற்சியில் படுதோல்வி கண்டு, முகத்தை மூடி, முக்காடிட்டுக் கொண்டு நழுவியது! ஹெக்டேக்கு வரவிருந்த மலைபோன்ற ஆபத்து பனிபோல விலகியது!

ஜனக மகாராஜா ஒரு துறவி போல இருந்து ஆட்சி செய்தார் என்று சொல்வார்கள். ராஜ்ய பாரத்தை ஒரு கடமையாகக் கருதிச் சுமந்தாரே தவிர, அரியாசனத்தில் ஆசை வைக்கவில்லை. பதவி தருகின்ற சுக, சௌக்யங்களில் பற்றுதல் கொள்ளவில்லை. தாமரை இலை நீர் போல இருந்தார்.

ஹெக்டேயும் அப்படித்தான் என்று கருத நிறையவே இடமிருக்கிறது. தமக்குப் பதவி ஆசை இல்லை என்றும் எப்போது வேணுமானாலும் முதல்வர் நாற்காலியை விட்டு விலகத் தயார் என்றும் அவர் பல முறை கூறியிருக்கிறார். ஆனால் அவருடைய பதவி விலகல் ஒரு வெற்றிடத்தை உருவாக்கிவிடக் கூடாது. அதைச் சாக்கிட்டுக் கொண்டு மத்திய அரசு ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வந்து விட, அது இ. காங்கிரஸ் கர்நாடகத்தைத் தன்வசப்படுத்திக் கொள்ள வசதி செய்து அளித்ததாக ஆகிவிடக் கூடாது. இவ்வாறான பல கடமை உணர்வுகள் சேர்ந்துதான் அவரைப் பதவியில் தொடர்ந்து இருக்கச் செய்கின்றன. ஒழுக்கத்தையும் நேர்மையையும் கடைப்பிடிப்பவர்களுக்கு, முதல்வர் பதவி, பிரதமர் பதவி முதலியன முட்கிரீடங்களாகத்தான் இருக்க முடியும். அதிகார வேட்கை என்பது சுகபோகங்களுக்கும் பணத்தாசைக்கும் அடிமைப்பட்டவர்களிடம் காணப்படும் ஒன்று. இவர்கள் நல் ஒழுக்கத்தை மதிக்காதவர்களாகவும் சூடு, சுரணையற்றவர்களாகவும் இருப்பது இயல்பு.

ஹெக்டே, சட்டமன்ற ஜனதா கட்சி அங்கத்தினர்களிடம் நம்பிக்கை வோட்டு கேட்டது, ஜனநாயக மரபுகளைப் போற்றும் அவரது உயர் பண்பையும் உணர்த்தியது. ரகசிய வாக்கெடுப்பு எதற்கு என்று முதலில் கேட்ட போதிலும், பிறகு அதற்கும் ஒப்புக் கொண்டதானது எதிர்த் தரப்பு வாதங்களையும் மதித்து, விட்டுக் கொடுக்கும் அவரது ஜனநாயகப் பண்பை மேலும் உறுதி செய்தது. சந்தேகத்துக்கு இடமற்ற முறையில் அவர் சட்டமன்ற ஜனதா உறுப்பினர்களின் நம்பிக்கையைப் பெற்று முதல்வராக நீடிக்கிறார்.

ஹெக்டே பாரபட்சமற்ற நேர்மையாளர் என்பதற்கும் நிரூபணம் உண்டு. சக அமைச்சர், தேவெ கௌடா மீது ஊழல் புகார்கள் சுமத்தப்பட்டிருக்கும் நிலையில் விசாரணைக்கு ஏற்பாடு செய்தார். தம் சொந்த மகன் மீது லஞ்ச ஊழல் புகார் சுமத்தப்பட்ட போதும் நீதிபதியை விசாரணைக்கு நியமித்தார்.

இத்தகைய ஒருவர் மீது அபவாதங்கள் சுமத்தி அவரைப் பதவியிலிருந்து இறக்க முற்பட்டவர் யார்? ஊழல் புகார்களைச் சுமந்து நிற்கும் தேவெ கௌடாதான்! புகார்களில் ஆதாரமில்லையெனில், அது விசாரணையில் தெரியவர, தலை நிமிர்ந்து நிற்கலாமே? எதற்கு கோஷ்டி சேர்த்து முதல்வரின் காலை வாரிவிட முயற்சி எடுக்க வேண்டும்? அந்த முயற்சி படுதோல்வி அடைய, இப்போது தேவெ கௌடா குப்புற விழுந்தாலும் மூக்குடையவில்லை என்று ஏதேதோ நொண்டிச் சமாதானங்களைக் கூறிக் கொண்டு திரிகிறார்.

தேவெ கௌடாவுக்குப் பக்கபலமாக நின்று அவரைத் தூண்டிவிட்டது ஜனதா தலைவர் சந்திரசேகரே என்று நம்ப நிறையவே இடமிருக்கிறது. நம்பிக்கைத் தீர்மானத்தின் பேரில் வோட்டெடுப்பை மேற்பார்வையிட வந்த தண்டவதேக்குச் சந்திரசேகர் எழுதிய கடிதத்தின் நகல் தேவெ கௌடா கோஷ்டியிடம் இருப்பதை அவர்களே அம்பலப்படுத்தியிருக்கிறார்கள்! ஹெக்டேயின் புகழ் ஓங்கி வருவதும், அவர் அனைத்திந்தியத் தலைவராக வளர்ச்சி பெறுவதும் சந்திரசேகருக்குப் பொறாமையை உருவாக்கியிருக்க வேண்டும். ஜனதாவின் இதர தலைவர்களின் சம்மதத்தைப் பெறாமல் லோக தளத்தின் அஜித் சிங் பிரிவை ஜனதாவுடன் இணைத்துக் கொண்டதும் அஜித் சிங்குக்குத் துணைத் தலைவர் பதவி தந்து, அடுத்து தலைவர் பதவியையும் உறுதியளித்திருப்பதும் சந்திரசேகரின் நோக்கங்களைச் சந்தேகத்துக்குரியதாக்கியுள்ளன.

இப்போது ஹெக்டே பெற்றுள்ள நம்பிக்கை வோட்டு, சந்திரசேகரின் மனச்சாட்சியை உசுப்பிவிட்டால் நல்லது. அல்லாது போனால் ஜனதாவின் உட்கட்சி ஜனநாயகம் மீண்டும் செயல்பட்டு, இப்போது ஹெக்டேக்கு ஆதரவை உறுதிப்படுத்தியது போல நாளை சந்திரசேகருக்குப் பாடம் கற்பிக்கவும் நேரிடும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

**பசும்பொன் மாவட்ட ரீ — விசிட்:**

# சில பிரச்னைகள் தீர்ந்தன; சில சோகங்கள் தொடர்கின்றன!

**கல்கி 23.8.87 மற்றும் 30.8.87 இதழ்களில் நாம் வெளியிட்டிருந்த பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டப் பிரச்னைகள் இப்போது எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டுள்ளன?**

**கா**டனேரி கிராமத்திலுள்ள சகாயமேரி என்ற இளம்பெண்ணை, அதே கிராமத்தைச் சேர்ந்த அன்னமுத்து என்பவர் நேசித்திருக்கிறார். அவளிடம், 'உன்னைத்தான் திருமணம் செய்து கொள்ளுவேன்!' என்று ஆசை வார்த்தைகளை அள்ளி வீசி... மிக நெருக்கமாகப் பழகியிருக்கிறார். கடைசியில் தன்னால் சகாயமேரி கர்ப்பமானதும், அவளைத் திருமணம் செய்து கொள்ளாமல் அன்னமுத்து ஏமாற்றி விட்டார். இதற்கு



* அருணாயி: ''மகள் வாழ்க்கை பாழாய்ப் போச்சுங்க...''



* சகாயமேரி: இப்போது குழந்தையுடன்......

அன்னமுத்துவின் அண்ணன் ஆரோக்கியமும் உடந்தையாக இருந்திருக்கிறார் என்பது சகாயமேரியின் முறையீடு. அதை விளக்கி, 'இந்தப் பெண்ணின் சோகக் கதை!' என்ற தலைப்பில் (கல்கி — 23.8.87 இதழ்) வெளியிட்டிருந்தோம்.

சகாயமேரியின் சோகக் கதையைக் கலெக்டர் பேட்டியின் போதும் கூறி, அவருக்கு நியாயம் வழங்குமாறு கேட்டுக் கொண்டோம். ஆகவே, இப்போது சகாயமேரிக்கு நல்லதொரு வாழ்க்கை அமைந்திருக்கும் என்ற நம்பிக்கையில் காடனேரி கிராமத்திற்குள் நுழைந்தோம்.

எங்களைக் கண்டதும் சகாயமேரியின் தாய், அருணாயி ஓடிவந்து, ''ராசா...! என் மக வாழ்க்கை பாழாப் போச்சுய்யா...!



* கட்டி முடிக்கப்பட்ட பாலத்தை இடித்துக் கட்டுகிறார்கள்...

* அந்தோணி:
''என்னை மிரட்றாங்க...''





* டாக்டர் கிருஷ்ணமூர்த்தி: ''ஒண்ணும் நடக்கலே''

அன்னமுத்து, என் மகளை நல்லா ஏமாத்திட்டான்...!'' என்று அழுதவாறே கூறினார்.

''என்னம்மா நடந்தது...? சற்று விளக்கமாச் சொல்லுங்கம்மா...'' என்றதும் தம் மகளின் சோகக் கதையை விவரித்தார்.

''ராசா... உங்க பத்திரிகையில் என் மகளைப் படம் பிடிச்சு வெளியிட்டீங்க...! அவளுக்கு நல்லதொரு வாழ்க்கை அமையும்னு நாங்க எதிர்பார்த்தோம். ஆனா... அதுக்கு நேர் மாறா நடந்து போச்சய்யா... என் மகளைக் கைவிட்டுட்டு... அவன் வேறு ஒருத்தியைக் கட்டிக்கிட்டான். இப்ப அவன் கட்டியிருக்கிறதும் எங்க சொந்தத்திலதான். என் மவ கதை முழுசா அந்தப் பெண்ணுக்கும் தெரியும். ஆனால் இனி என் மவ கதி...? ஏழு மாசக் கைக்குழந்தையை வெச்சுக்கிட்டு அவ கஷ்டப்படுறாய்யா...''

''உங்க மகள் சம்பந்தமாக, நாங்கள் கலெக்டர் பேட்டியில் கேட்டபோது, மாவட்டப் போலீஸ் உயர் அதிகாரி, இது சம்பந்தமாக விசாரணை செய்து வருவதாகச் சொன்னாரே... அவங்க எதுவும் செய்யலேயா?''

''ஒரு உதவியும் செய்யலீங்க...! நாங்க ஏழைங்க... அன்றாடம் வயித்துப் பாட்டைப் பாக்கறதிலேயே பொழுதெல்லாம் போயிடும்! எதிர்த்து வழக்காடவும் வசதியில்லீங்க...'' என்றார் அந்தத் தாய்.

அத்தாயைச் சமாதானப்படுத்தி, ''இப்ப உங்க மகள் எங்கே போயிருக்கா...?'' என்று கேட்டோம்.

''பச்சைக் கொளந்தையையும் வெச்சுக்கிட்டு... அவ வயக்காட்டுக்கு வேலைக்குப் போயிருக்கா. இப்ப வந்துருவா... ஆளு அனுப்பியிருக்கிறேன்!''



* கலெக்டர் கோபாலன்.



* சேவியாசகம்: இப்போது பணியில் இருக்கிறார்.

சிறிது நேரத்தில் சகாயமேரி தன் குழந்தையுடன் வந்தார். வயலில் வேலை பார்க்கிற போது, வெயிலின் கொடுமைக்குப் பாதுகாப்பாகத் தலையில் கட்டிய துணியும் அப்படியே இருந்தது.

நாங்கள் எட்டு மாதங்களுக்கு முன்பு பார்த்த சகாய மேரியா என்று ஆச்சரியப் பட்டோம்! கவலையும் சோகமும் அவரை நிறையப் பாதித்திருந்தன. எங்களைச் சந்தித்ததுமே தாங்க முடியாத வேதனையால், அவருடைய கண்கள் குளமாகிவிட்டன!

''அன்னமுத்து ரெண்டாவது கல்யாணம் பண்ணிக்கிட்டது உனக்குத் தெரியுமா?''

''முதல்ல தெரியாதுங்க. வெளியூர்ல வெச்சிக் கலியாணம் பண்ணிக்கிட்டு ரெண்டு மூணு வாரம் கழிச்சுத்தான் இங்கிட்டுக் கூட்டிக்கிட்டு வந்தாங்க... அவரு இப்படி செய்வாருன்னு நான் நெனைக்கவேயில்லீங்க...!''

''இனிமேல் இந்தப் பெண் குழந்தையையும் வெச்சுக்கிட்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று சகாயமேரியைக் கேட்டோம்.

''கலியாணமாகாம குழந்தை பெத்தவள்னு கிராமத்தில எல்லாரும் கேலியாப் பேசுவாங்கன்னு கொஞ்ச நாளா வீட்டை விட்டு வெளியில வராமதான் இருந்தேன். எத்தனை நாளைக்குத்தான் ஆயி, அப்பன் உட்கார வெச்சுச் சோறு போடுவாங்க? அதான், நானும் இந்தப் பச்சைக் குழந்தையை இடுப்பிலவெச்சுக்கிட்டுவயக்காட்டுலவேலை பார்க்கிறேன். எனக்கு நேர்ந்த கொடுமை வேறே எந்தப் பொண்ணுக்குமே வரக்கூடாதுங்க...!'' என்று சொல்லி விட்டு முகத்தை மூடிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதார் சகாயமேரி.

சகாயமேரி சம்பந்தமாகச் சென்ற தடவை பேட்டியளித்த அந்தோணியை இந்த முறை சந்தித்த போது: ''அன்னமுத்துவுக்குக் கடந்த பிப்ரவரி மாதம்தான் கலியாணம் நடந்தது. கலியாணம் முடிஞ்சு, இந்தக் கிராமத்துக்குப் பொண்ணைக் கூட்டிக்கிட்டு வந்தப்போதான் எங்களுக்குத் தெரிஞ்சது. ஒருநாள், நான் களத்தில வேலை செய்துக்கிட்டு இருந்தப்போ, அன்னமுத்துவின் அண்ணன், ஆரோக்கியம், அருளானந்து — ரெண்டு பேரும் என்னை நெருங்கி '''கல்கி' யில் போட்டு என்ன செய்துட்டீங்க...?'' என்று இளக்காரமாகக் கேட்டாங்க. நான் ஒண்ணும் சொல்லாம வேலையைப் பார்த்துக்கிட்டிருந்தேன். அப்போது, ''மறுபடியும் இது சம்பந்தமாக நீ பத்திரிகையில் பேட்டி கொடுக்கவோ, சிவகங்கைக்குப் போய் இலவசச் சட்டக் குழுவைச் சந்திக்கவோ செய்தால்... உன்னை வெட்டிக் கொன்னுட்டு... எங்கே வேணும்னாலும் போவோம்; எவ்வளவு வேணும்னாலும் செலவு செய்வோம்...''னு மிரட்டினாங்க. அப்பவும் நான் எதுவும் பேசலே!

''சகாயமேரி, என் நெருங்கிய சொந்த பந்தமில்லே! ஒரு மனிதாபிமானத்தோடு அவளுக்கு உதவணும்னு நெனைச்ச எனக்கு எவ்வளவு கஷ்டம் தெரியுமா? நான் புள்ளைக் குட்டிக்காரன். ராத்திரியில ரெண்டு மணிக்கும் மூணு மணிக்கும் எழுந்து, வயக்காட்டில போய்த் தண்ணீர் பாய்ச்சுவேங்க. இவங்களால எனக்கு ஒண்ணு ஆச்சுன்னு... என் குடும்பத்தை யாருங்க காப்பாத்துவது...? இந்த நாட்டில் ஏழைங்களுக்கு நீதியும் கிடைக்காது... நிம்மதியா வாழவும் முடியாது!''

''இது சம்பந்தமாக இலவசச் சட்டக் குழுவை நீங்கள் சென்று பார்க்கவில்லையா...?''

''பார்த்தோம். அவர்கள், அழகப்பன் என்னும் வக்கீலைப் பார்க்கச் சொன்னாங்க. அவரிடம் சென்றபோது, 'சகாயமேரி — அன்னமுத்து எவ்வளவு காலமாகப் பழகினார்கள்? அவள் கருத்தரித்த நாள் எது...? என்பது போன்ற விஷயங்களுக்கு ஆதாரம், சாட்சி இருக்கா...? இருந்தால், என்னை வந்து அடிக்கடி பாருங்கள்!' என்றார். காடனேரியிலிருந்து சிவகங்கைக்கு அடிக்கடி வந்து, போறது எங்களுக்கு ரொம்பக் கஷ்டமுங்க... வக்கீல் கேட்ட ஆதாரங்களுக்கும் நாங்க எங்கே போறது...?'' என்றார் அந்தோணி.

கடைசியில் நாங்கள் சிவகங்கையிலுள்ள வழக்கறிஞர் கே. அழகப்பனைச் சந்தித்து, ''சகாயமேரிக்கு ஏதாவது நீதி கிடைக்க வாய்ப்பிருக்கா...?'' என்று அவரிடம் கேட்டோம்.

''சட்டத்திற்குத்தேவைசாட்சிதான். சகாய மேரிக்குப் பிறந்துள்ள குழந்தை, அன்னமுத்துவின் குழந்தைதான் என்பதை நிரூபிக்க வேண்டும். அப்போதுதான் கேஸ் போட முடியும். இப்போது அவன் வேறு ஒரு பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கிட்டதாகச் சொல்லுறீங்க... அதுக்கும் சாட்சியோடு நிரூபிக்கணும்!'' என்று அவர் 'சட்ட ரீதி'

யாகப் பேசினார்.

இது சம்பந்தமாகப் போலீஸ் தரப்பிலிருந்து உடனடியாக ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்பதை அறிந்து கொள்ள மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் நந்தபாலனைச் சந்திக்க முயன்றும் பலனளிக்கவில்லை!

சகாயமேரி ஏமாற்றப்பட்ட விஷயத்தில் அந்தப் பெண், அன்னமுத்துவால்தான் கருவுற்றார் என்பதற்குச் சாட்சியம் இருந்தால்தான் வழக்குப் போட முடியும் என்று மெத்தனம் காட்டும் போலீஸ் துறைக்கு, 'ஒரு பெண், ஓர் ஆணிடம் தன்னை இழந்ததற்குத் தன்னுடைய வாக்குமூலத்தைத் தவிர வேறு சாட்சியங்களைக் கொண்டு வரத் தேவையில்லை...!' என்று ஏற்கெனவே வெளியான நீதிபதிகளின் தீர்ப்புக்களையே எடுத்துச் சொல்ல விரும்புகிறோம். ஒரு பெண்ணோ அல்லது ஆணோ, வழி தவறித் தவறு செய்யும்போது சாட்சிகளை எதிரில் வைத்துக் கொண்டா இருப்பார்கள்? அப்படி எதிர்பார்ப்பதுதான் எவ்வளவு சிறுபிள்ளைத்தனம்?

இரண்டாவதாக, காரைக்குடியிலுள்ள கோவாப்ரேடிவ்ஹவுஸ் பில்டிங் சொசைட்டி லிமிடெட்! காரைக்குடியிலுள்ள சூடாமணிபுரத்தில் நிலம் வாங்கி, வீட்டு மனைகளைப் பிரித்து விற்பதற்கான ஏற்பாடுகள் பூர்த்தியடைந்த நிலையிலும், சுமார் ஐந்தாண்டு காலமாக இன்னும் அதன் உறுப்பினர்களுக்குச் சொசைட்டி வீட்டு மனைகளை ஒப்படைக்கவில்லை என்ற செய்தியை முன்பு வெளியிட்டிருந்தோம் அல்லவா! இதுசம்பந்தமாக, அரசு தரப்பிலிருந்து என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் என்பதை அறிய, மீண்டும் காரைக்குடி சென்று, டாக்டர் கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்தோம்.

"கல்கியில் செய்தி வெளிவந்ததும், அரசு தரப்பிலிருந்து ஒரு செயலாளரை நியமித்தார்கள். மேலும், கடந்த டிசம்பர் 12 — ஆம் தேதி நிர்வாகக் குழுக் கூட்டத்தில், மேற்படி இடத்தில் சாலை வசதிகள் செய்து கொடுப்பது சம்பந்தமாக விவாதித்த போது, சங்கத் துணை விதிகளின்படி, மேற்படி வேலைகளை ஸ்தல ஸ்தாபனமாகிய காரைக்குடி நகராட்சியிடம் ஒப்படைக்க வேண்டுமென்று பெரும்பான்மைக் குழு உறுப்பினர்கள் தீர்மானம் செய்தனர். ஆனால், அத்தீர்மானத்தின் பேரில் எந்தவித நடவடிக்கையையும் செயலாளர் எடுக்காமல் காலந்தாழ்த்தி வருகிறார்.

"இதற்கிடையில் ஜனவரி மாதம் 25 — ஆம் தேதியில் தலைவர் ராஜினாமா செய்திருப்பதாக அறிகிறோம். ஆனால், எங்களுக்கு ஆதார பூர்வமாக எந்தவிதமான தகவலும் வரவில்லை. புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்கவோ, அல்லது ஒரு ஸ்பெஷல் அதிகாரியைப் போடவோ செய்யாமல் சங்கம் தற்போது செயல்படாமல் முடங்கிக் கிடக்கிறது! முன்பு, தலைவர், சுப்பையா

அடுத்த இதழில்...



இனிக் கட்சிக்கு [illegible] என்ன?

— கவர் ஸ்டோரி

அம்பலம், தன்னிச்சையாக இயங்கி வந்தார். இப்போது புதிதாக நியமிக்கப்பட்டுள்ள செயலாளரும், தன்னிச்சையாகத்தான் இயங்கி வருகிறார். எந்தவிதமான முன்னேற்றமும் ஏற்படவில்லை. காசைக் கொடுத்து விட்டு இன்னும் எவ்வளவு காலந்தான் நாங்கள் காத்துக் கிடப்பது...?'' என்று கேட்டார், டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

இந்தப் பிரச்னை சம்பந்தமாக, புதிதாக நியமிக்கப்பட்டுள்ள செயலாளரைச் சந்திக்கச் சென்றபோது அவரில்லை. தலைவர், சுப்பையா அம்பலம் ராஜினாமாச் செய்ய வேண்டிய காரணம் பற்றி அவரிடமே கேட்கலாம் என்று முடிவு செய்து, டெலிபோனில் தொடர்பு கொண்டபோது, ``இந்தப் பிரச்னை சம்பந்தமாக, உங்களைச் சந்திக்கவோ, உங்களுடன் பேசவோ விரும்பவில்லை...!'' என்று ஒரே வாக்கியத்தில் 'கட்' செய்து விட்டார் சுப்பையா அம்பலம்.

மூன்றாவதாக, மானாமதுரைக்கு அருகிலுள்ள சிப்காட் தொழிற்பேட்டைக்குச் சென்றோம். எந்தவிதமான முன்னேற்றமுமில்லை! மானாமதுரை நகரிலுள்ள பிரச்னைகளைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம் அல்லவா? பஸ் நிலைய இடப் பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லை. புதிய பஸ் நிலைய வேலையும் ஆரம்பமாகவில்லை! சரியான பஸ் நிலைய வசதியில்லாததால்... பயணிகள் சாலையை அடைத்துக் கொண்டு நிற்கின்றனர். பை—பாஸ் ரோட்டில் பஸ் செல்வதும், ஊருக்குள் வராத போக்கும் நீடிக்கிறது. பஸ் நிலையக் கழிப்பறை பராமரிக்கப்படாததோடு, மேல் கூரையும் அமைக்கப்படவில்லை.

புதிதாகக் கட்டப்பட்டுள்ள அரசு மருத்துவமனையில் நிரந்தரமாகப் பெண் மருத்துவர் நியமிக்கப்படவில்லை. குமாஸ்தா இல்லாததால், அம்மருத்துவமனை கம்பவுண்டரே இரண்டு வேலைகளையும் கவனிக்கிறார். அம்மருத்துவமனையைக்கட்ட ஒதுக்கியபணத்தில் இரண்டு லட்சம் ரூபாய் மிச்சமிருக்கிறது. எனினும் அந்தப் பணத்தில் இன்னும், அம்மருத்துவமனையைச் சுற்றிக் காம்பவுண்ட் சுவர் கட்டப்படவில்லை.

மேலும் பெரம்பலூர் — மானாமதுரை இணைப்புப் பாலம் பழுதடைந்ததால், 1982—இல் புதிய பாலம் கட்டத் தொடங்கி 1988—இல் முடித்தார்கள். சுமார் தொண்ணூறு லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட அப்பாலத்தின் இரண்டாவது தூண் அடித்தளம் சரியான கலவையைப் பயன்படுத்தாததால், உதிர ஆரம்பித்தது. கட்டிய பாலத்தை இடித்துவிட்டு இப்போது புதிதாகக் கட்டுகிறார்கள்! முன் யோசனையின்றி அதிகாரிகளும் காண்ட்ராக்டர்களும் செயல்படுவதால், இரட்டைச் செலவும் கால விரயமும்!

இனி தீர்க்கப்பட்டுள்ள சில பிரச்னைகளைப் பார்ப்போம்:

•• சிவகங்கைத் தலைமை மருத்துவமனையில் புதிதாக நாற்பத்தியெட்டுப் படுக்கைகள் கொண்ட கட்டடம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. படுக்கைகள்தான் வரவேண்டும். அம்மருத்துவமனையை இன்னும் விரிவுபடுத்தி, நோயாளிகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து தரத் திட்டமிட்டுச் செயல்பட்டு வருவதாக, மாவட்டத் தலைமை மருத்துவ அதிகாரி, லட்சுமியய்யா கூறினார்.

•• இடைக்காட்டூர் குடிநீர்ப் பிரச்னையைப் போக்க போரிங் போடப்பட்டுள்ளது. மேலும் ரூபாய் ஐந்து லட்சம் செலவில் குடிநீர் வேலைகள் தொடங்க அடிக்கல் நாட்டப்பட்டுள்ளது!

•• பி. ஸ்ரீநிவாசகம் என்பவர் காமராஜர் மாவட்டத்திலுள்ள முகவூர் பேரூராட்சியில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது அது இரண்டாகப் பிரிக்கப்பட்டு, ஒன்று பசும்பொன் மாவட்டத்தில் சேர்ந்து விட்டதால் அவருக்கு எந்த இடத்திலும் வேலையில் சேர முடியாமல் போன நிலையைக் குறிப்பிட்டிருந்தோமல்லவா? இப்போது அவர் திருத்தங்கல் பேரூராட்சியில் பணியில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்.

•• திருப்பத்தூர் அருகில் ரப்பர் தொழிற்சாலை தொடங்கப்படுவதற்கான அனுமதி பெறப்பட்டுப் பூர்வாங்க நடவடிக்கைகள் அனைத்தும் தற்போது துவங்கப்பட்டு விட்டன.

•• ஐந்து கி. மீ. நீளமுள்ள மறவமங்கலம்—சிறியூர் சாலையை ஒரு லட்சம் ரூபாயில் சரிப்படுத்த அனுமதி வழங்கப்பட்டுப் பணிகள் துவங்கவுள்ளன.

•• மேலப்பட்டமங்கலம் ஊராட்சியிலுள்ள வடக்கு வேழனிப் பட்டியில் ஆழ் குழாய்க் கிணறு அமைக்கும் பணியும், சத்ரு சங்காரக் கோட்டையில் மேல்நிலைத் தொட்டி கட்டும் பணியும் நடைபெற்று வருகின்றன.

•• திருப்பத்தூரில் ஒரு விரிவான பேருந்து நிலையம் அமைக்க ஒரு மாஸ்டர் பிளான் தயாராகியுள்ளது. விரைவில் அரசுக்கு அனுப்பி வைக்கப்படும்.

•• காரைக்குடி அருகிலுள்ள தமிழ்நாடு கெமிகல்ஸ் நிறுவனத்திலிருந்து வெளியாகும் கழிவு நீரைச் சுத்திகரிக்கச் சுத்திகரிப்பு நிலையம் ஒன்று கட்டி முடிக்கப்பட்டு விட்டது. பணி விரைவில் துவங்கும்.

—இப்படிப் பலபிரச்னைகளுக்கான தீர்வுகளைப் பசும்பொன் மாவட்டக் கலெக்டர் ஆர். கோபாலன் பட்டியலிட்டுக் கொண்டே சென்றாலும் அவர் கவனித்துச் சீர்செய்ய வேண்டிய பிரச்னைகள் நிறையவே பாக்கியுள்ளதை நினைவூட்ட விரும்புகிறோம்.

கட்டுரையும், புகைப்படங்களும்:

— பானு மணாளன்

பரபரப்பான
விளையாட்டுக்குப்
பரவசமூட்டும்
சாலிடெர்






வியத்தகு எழில்மிக்க CAT 1000 SE. கட்டுறுதிக்கே இறுதியில் வெற்றி!

இது ஒரு ஷைரூபீம் எலக்ட்ரானிக்ஸ் (பி) லிமிடெடின் தயாரிப்பு

Insight DE-681

# சிவசேனையின் ஆதிக்கம் பரவுகிறது

மகாராஷ்டிரா மாநிலத்தில் ஔரங்காபாத் முக்கியமானதொரு நகரம். சென்ற வாரம் இங்கு நடந்த மாநகராட்சித் தேர்தலில் சிவசேனு எதிர்பாராத விதமாக வெற்றி கண்டு ஆட்சியைக் கைப்பற்றியிருக்கிறது. பம்பாய் நகரம் மற்றும் அதை ஒட்டிய தாணு பகுதிகளில் மட்டுமே ஓரளவு செல்வாக்குடன் செயல்பட்டுக் கொண்டிருந்த சிவசேனு கட்சியின் ஆதிக்கம் இப்போது மாநிலத்தின் இதர பகுதிகளில் பரவி வருகிறது.

ஔரங்கபாத் தேர்தலில் மொத்தம் 60 இடங்களில், 40 க்கு மட்டுமே போட்டியிட்டு 27 இடங்களை அநாயாசமாகக் கைப்பற்றியிருக்கிறது சிவசேனு. காங்கிரஸ் கட்சியில் வெற்றி பெற்ற வேட்பாளர்களின் எண்ணிக்கை 18 மட்டுமே! மற்ற கட்சிகளின் நிலைமை இதைவிட மோசம்! ரிபப்ளிகன் கட்சி, தலித் கட்சி, முஸ்லீம் லீக் ஆகியன, மிஞ்சிய சில இடங்களைப் பிடித்திருக்கின்றன. பாரதிய ஜனதா, மற்றும் ஜனதா கட்சிகள் ஒரு வேட்பாளர் கூடத் தேர்ந்தெடுக்கப்படாமல் படுதோல்வியடைந்துள்ளன. சேனு தலைவர்கள் வெற்றிக் களிப்பில் மிதந்து கொண்டிருப்பது இயற்கையே. சில வாரங்கள் முன்புதான் சிவசேனுவின் சந்திரகாந்த் படுவால் பலத்த போட்டிக்கிடையே பம்பாய் மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தொடர்ந்து வந்த ஔரங்கபாத் வெற்றி சேனுவை மேலும் ஊக்குவிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இந்த வெற்றிகளில் சுவாரசியமான விஷயம் என்னவென்ருல் மேயர் தேர்தலில் முஸ்லீம்லீக் கட்சியைச் சேர்ந்த ஐந்து கௌன்சிலர்கள் சேனு பிரதிநிதிக்கு வாக்களித்திருக்கிருர்கள்!

இன்னெரு விஷயம், ஔரங்கபாத் ஜனத்தொகையில் 25 சதவிகிதம் முகம்மதியர்! சிவசேனேயோ, முகம்மதியர்களுக்கு எதிராக வெளிப்படையாகவே செயல்படும் கட்சி! காங்கிரஸ் போன்ற பெரிய கட்சிகளில் நிலவும் உட்பூசல்கள் சிவசேனேக்கு உதவியுள்ளன.

சில நாட்களாக சிவசேனேயின் பிரசாரம் இந்துமத புனர் எழுச்சியை அடிப்படையாகக் கொண்டுள்ளது. சமீபத்தில் பிரபலப் படுத்தப்பட்ட கோஷம்: கர்வ் ஸே கஹோ ஹம் ஹிந்து ஹை: ''பெருமையுடன் கூறு நாம் இந்து என்று!''

### மந்திரிகளின் தந்திரம்!

ஜே. ஜே. மருத்துவமனே, கலப்பட மருந்து மரண கேசில் விசாரணே செய்த பம்பாய் உயர் நீதிமன்ற நீதிபதி லென்டின், தமது அறிக்கையில் சம்பந்தப்பட்ட அதிகாரிகள், அமைச்சர்களேக் கடுமையாகக் கண்டித்திருக்கிருர். இதனுல் பாதிக்கப்பட்டவர்கள் அவர் மீது கோபமடைந்திருக்கிருர்கள். லென்டின் தமது அறிக்கையில் தகுந்த காரணமின்றி தங்களே இழுத்துச் சம்பந்தப்படுத்தியிருக்கிருர் என்று மகாராஷ்டிரத்து முன்னுள் சுகாதார மந்திரிகள் பனிராம் ஹிரே மற்றும் பாய் சாவந்த் ஆகியோர் முறையிட்டிருக்கிருர்கள்.



ஜஸ்டிஸ் லென்டின்

லென்டினுக்குப் பதிலடி கொடுக்கும் நோக்கில், மகாராஷ்டிர சட்டசபை அங்கத்தினர்களின் மதிப்பு பாதிக்கப்படும் விதத்தில் லென்டின் பேசியதாகச் சட்டசபையில் அவர் மீது உரிமைப் பிரச்னே எழுப்பப்பட்டிருக்கிறது!

— ஜி. சந்திரசேகர்

அது ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை. கார் கடற்கரையை நெருங்கியதும், ஜில்லென்ற மென்காற்று முகமன் கூறியது. காந்தி சிலையின் இடப் பக்கமாகக் காரைப் பார்க் செய்தான் சீனு. அந்தச் சிவப்பு நிற சின்ன மாருதியிலிருந்து வெளியே வர என் கனத்த சரீரம் திண்டாடியது. புல் தரையில் அமர்ந்து கொண்டோம். எங்களைப் பற்றி அவசியம் சொல்லியாக வேண்டும். இங்கே 'நான்' என்பது கிச்சு என்ற கிருஷ்ணசாமி. பல தலைமுறைகளாக மார்க்கெட் உள்ள நாலைந்து சோப் பேஸ்ட் வகையறாக்களுக்கு ஏஜென்ஸி என் கையில்.

சீனு என்ற சீனிவாச சர்மா ஒரு மனோ தத்துவ டாக்டர். எங்கள் சிநேகிதத்திற்கு ஐம்பது வருட ஆயுள். பள்ளிக்கூடத்தில் ஒன்றாகவே படித்தோம். அப்புறம் காலேஜ் என்று பிரசிடென்சிக்குப் போன போதும் ஒரே வகுப்புதான். அதை முடித்துக் கொண்டு சீனு மெடிக்கல் பக்கம் போக, நான் தொழில் பக்கம் போய் விட்டேன். இடையில் ஓர் இரண்டு வருடம் சீனு அமெரிக்கா போனதைத் தவிர்த்து இத்தனை வருடமும் நாங்கள் வாரம் ஒரு முறையாவது சந்தித்துக் கொள்வோம்.

தன்னை அலட்சியப்படுத்திய ஜனங்கள் மீது கோபமோ என்னமோ, கொஞ்ச தூரத்தில் கடல் அலைகள் உள்ளடங்கிப் பொருமிக் கொண்டிருந்தன. சன்னமாய் அரை நிலா கடலுக்கு ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தது. எங்களுக்குப் பத்தடி தூரத்தில் சேட் குடும்பம் ஒன்று வட்டமாய் அமர்ந்து விருந்திலும் கேளிக்கையிலும் லயித்திருந்தது. நாற்பது வயதுக்காரர் ஒருவர் பழைய குருதத் படப் பாட்டை ரசித்துப் பாடிக் கொண்டிருந்தார். 'ச்சவுத்வின் கா ச்சாந்த்.

பாட்டை ரசித்தபடி சீனு சிகரெட் புகைக்க, நான் வெற்றிலையில் சுண்ணும்பைத் தடவியபடி பேச ஆரம்பித்தேன்.

"சீனு, குருதத் ஏன் தற்கொலை செய்து கொள்ளணும்?"

"கிக கிசு பாணியில் பதில் எதிர்பார்க்கறியா?"

"உன் மனோதத்துவப் பாணியில்தான் சொல்லேன்!"

"அப்போ இந்தத் தற்கொலைப் பிரச்னையைப் பொதுப்படையாகப் பார்ப்போம். நம்ம மனசோட சமாதானமா வாழறது பெரிய கலை. வாழ்க்கையை எப்போ அறிவு பூர்வமா வாழறது — எப்போ உணர்வு பூர்வமா வாழறது என்ற முறைமை தெரியணும். இன்னிய மனுஷன் தன் நேரத்துலே பெரும் பகுதியை வாழறதுக்கு ஒதுக்கலே. தன் வாழ்வை மறக்க உதவுறதா நினைக்கற விவகாரங்களுக்குத்தான் ஒதுக்கறான்! பூமியிலே காலை வைச்சு நடக்கணும்னா மண்ணோட, தரையோட எதிர்ப்பும் உராய்ப்பும் இல்லாட்டி நடக்க முடியாது. உராய்வுதான் இயற்கை — வாழ்க்கை! அதைப் புரிஞ்சுக்கணும். தானும் தனதும்தான் வாழ்க்கைன்னு ஒரு மூடக் கோட்டை கிழிச்சுக்கிட்டு, மனசிலே புழுக்கத்தை ஏற்படுத்திக்கிட்டு அல்லாடினா, விகாரமும், விபரீதமும், விகல்பமும்தான் மிஞ்சும்! தற்கொலையை விட மோசமான ஒரு சுய பரிதாப வேதனை வாட்டும்!"

சீனு சற்று மௌனமாகி விடவே, பக்குவமாய்த் தூண்டி விட்டேன்.

"ஏதாவது கேஸ் ஞாபகம் வந்துடுச்சா? சொல்லேண்டா...!"

மெலிஞ்சி ரகுநாதன்

"வராக மூர்த்தின்னு ஒருத்தர். ஆத்ம கருதியிலே சேராமே, ராக பேதத்துலே தவிச்சவர்..."

"கதையா எழுதறே? பேசற மாதிரி தெளிவாகச் சொல்லுடா சீனு...!"

"ஆகட்டும்... கேளு... வராகமூர்த்தி ரிடயர்ட் போஸ்ட் மாஸ்டர். என்னைப் பார்க்க வந்தார். விவரமான ஆளாத்தான் தெரிஞ்சுது. படிய வாரின தலைமுடி. அப்பழுக்கில்லாத, சுத்தமான கண்கள். சன்னமான குரல் என்றாலும் அதிலே ஒரு தீர்க்கமும் கொஞ்சம் மூர்க்கமும் இருந்துச்சு..."

"அவரு.. வராகமூர்த்தி.. எதுக்கு வந்தாரு? அதைச் சொல்லு!"

"அதான் சொல்லிண்டிருக்கேனே... ஏண்டா கிச்சு, இந்த இடிபஸ் காம்ப்ளெக்ஸ் உனக்குத் தெரியும்தானே?"

"கிரேக்க கதைதானேடா... பிரிந்து வாழ்ந்த இடிபஸ், தன்னைப் பெற்றவர்னு தெரியாமே அப்பாவைக் கொல்றான்; பெற்றவள்னு தெரியாமே தாயாரையே கல்யாணம் கட்டிக்கறான். உண்மை தெரிஞ்சதும் எல்லாம் குத்திக்கிட்டுச் சாகிறதுகள்!"

"அதே கதைதான்... சத்தமா சொல்லாதே... யாராவது சினிமாக்காரன் காதுலே விழுந்து விபரீதம் பண்ணிடப் போறான் — இருக்கிறது போறாதுன்னு!"

இருவருமே சங்கடமாய்ச் சிரித்தோம். மீண்டும் சீனு தொடர்ந்தான்.

"இடிபஸ் கதையிலே அது தெரியாமே நடந்த தவறு... ஃப்ராயிட் ஒரு போடு போட்டான் — மகள் தந்தையையும், மகன் தாயையும் தங்கள் சப்—கான்சியஸ் மைண்ட்லே பால் உணர்ச்சியோட நேசிக்கறாங்கன்னு!"

"சப்—கான்சியஸ், அன்—கான்சியஸ்னு ஜார்கன்ஸ்லே இறங்க வேண்டாம். வராக மூர்த்தி கேஸ் பத்திச் சொல்லு!"

''அவரு கேஸ் இடிபஸ் கதையையும் முழுங்கி ஏப்பம் விடற மாதிரி ஒண்ணு! எந்த மன விகாரமும் இல்லாத ஒழுக்கஸ்தர் தான் அவர். தவறுன்னு தெரிஞ்சும் மாத்திக்க முடியாத ஒரு மாய வலையிலே சிக்கித் தவித்து, வேறே வழியே இல்லாமே என் அட்வைஸ் கேட்டு வந்தாரு.''

''அதென்ன மாய வலை?''

''சொல்றேன். அதுக்கும் முன்னே அவரோட சொந்த அந்தரங்க வாழ்க்கையைப் பார்ப்போம். இருபது வயசலே கல்யாணம். கோயில் சிலையாட்டம் மனைவி. இவளை வராக மூர்த்தி எல்லாமா, எல்லாத்துக்கும் மேலாகவும் நேசிச்சாரு. அவளோட உதிர்ந்து போன தலைமுடியைக் கூட, தூக்கி எறிய மனசில்லாமே சேர்த்து வைக்கிறவரு. கல்யாணமான புதுசலே மட்டுமல்ல, தொடர்ந்தும் அவரோட ஆசையும் மோகமும் துரித கதியிலே வளர்ந்துக்கிட்டே போகுது. ஒரு தடவை பஸ் பயணத்துலே, அந்தம்மா புடைவையோட முந்தானைத் தலைப்பு ஒருத்தன் குடையிலே சிக்க, அவன் நிதானமா அதைப் பிரிச்க விட்டிருக்கான். வீட்டுக்கு வந்ததும், அந்தப் புதுப் புடைவை குப்பைத் தொட்டிக்குப் போச்சுதாம்! ஒரு சமயம் தபால்காரர் அந்தம்மா பெயரை உரக்க உச்சரிக்க, ரிஜிஸ்தர் தபால் கொண்டு போய் 'கேட்'லே நின்னுருக்காரு. சம்சாரம் பெயரை ஒருத்தன் கூவுறதாவதுன்னு, 'போய்க்கோ... உன் தபாலும் வேணாம் ஒண்ணும் வேணாம்'னு வேகப்பட்டிருக்காரு!''

''அடப்பாவி... 'பொஸசிவ்'னாலும் இப்படியும் ஒருத்தரா?''

''அப்புறம் கேளு பரிதாபத்தை...... தலைச்சன் பிரசவம். தகப்பனார் வீட்டுக்கு மனைவி போறா. லேடி டாக்டர்தான் பிரசவம் பார்க்கணும்னு கண்டிச்சுச் சொல்லிட்டாரு மாப்பிள்ளை! அந்தச் சின்ன ஊருலே லேடி டாக்டர் இல்லாம, வலி வந்து கத்தறவளைக் கூண்டு வண்டியிலே பக்கத்து ஊருக்குக் கொண்டு போறப்போ... ஒரு பையனைப் பெத்துட்டு அந்த மகராசி போய்ச் சேர்ந்துட்டா!''

''செத்தே போயிட்டாளா?''

''வேறே நான் என்ன சொல்றேன்! வராகமூர்த்தி தன்னோட மனைவி நினைவைத் தவிர வேறே எந்த சிந்தனையும் இல்லாமே, மறு விவாகம் பண்ணிக்காமே, பையனை எப்படியோ வளர்த்து ஆளாக்கி, அவனுக்கும் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைச்சாரு — சொந்த மச்சினன் மகளை.''

''அப்புறம்...?''

''அப்புறம்தான் வருது 'ஜீன்'ஸ்களின் கோமாளிக் கூத்து! பிரும்மன் அசந்த நேரமோ என்னமோ, ஒரே அச்சுலே ரெண்டு பேர்! வராக மூர்த்திக்கு ஒரு பேத்தி பொறந்தா. குழந்தை வளர வளர, தன் பாட்டியின் அதே முக அமைப்பில், உடல் வாகில், குரல் முதல் கொண்டு உறிச்சு வைச்சுக்கிட்டு, வராக மூர்த்தியைச் சந்தோஷத்திலும் சங்கடத்திலும் திணற வைச்சுட்டா!''

''சரி... இதுலே சங்கடம் வரக் காரணம்?''

''தான் — தனதுன்னு மனவேலி கட்டிக்கிட்டு, புற உலகைத் தரிசிக்க மறுத்து வாழ்ந்த வராக மூர்த்திக்கு விதி கொடுத்த தண்டனைதான் அந்தச் சங்கடம்! ஏக பத்தினி விரதனா வாழ்ந்தாரு அவருங்கறது அல்ல அவரோட சிறப்பு. ஏக சிந்தனையாவும் இருந்தவரு! பிற பெண் முகம் கூடப் பார்க்காத வைராக்கியவாதி! பேத்தியைப் பேத்தியாத்தான் பார்த்தாரு... நினைச்சாரு. ஆனா அந்தப் பேத்திக்கு வரன் தேடும் படலம் வந்தப்போ மனுஷன் தவிக்க ஆரம்பிச்சுட்டாரு. தன் மனைவியின் பிம்பமா இருக்கிற பேத்தியை, எவனோ ஒருத்தன் எடுத்து ஆளறது அவருக்கு லவலேசமும் சம்மதமில்லை.''

வாஸ்தவமாகவே இந்த இடத்தில் எனக்கு வராகமூர்த்தி பற்றி என்ன நினைப்பது என்றே புரியவில்லை. சீனு அவருக்காக அனுதாபம் கொண்டிருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. சிகரெட் பாக்கெட் எடுத்து வரச் சீனு கார் பக்கம் நடந்தான். அவன் நடையில் ஒரு சோகம் தெரிந்தது. இந்தச் சோகத்திற்கும் உஷா மேனனுக்கும் சம்பந்தம் இருக்குமா என்று என் மனம் வக்கணையாகச் சிரித்தது.

சீனுவும் நானும் காலேஜில் இருந்தப்ப எங்க கூட படிச்சவ உஷா மேனன். ஆம்பளை மாதிரி இருப்பா. ரொம்ப சாதாரண தோற்றம்... நிறம் கூட மட்டம்தான். குதிரை மாதிரி சிரிப்பா. எது எப்படி இருந்தாலும், சீனுவுக்கு அவ மேலே அபாரமா ஒரு இது! அவள் பார்வை தன் மேலே பட்டாலே குளிர்ந்து போயிடுவான். அவளுக்காகத் தவங்கிடந்தான். என்கிட்டே வெளிப்படையா சொல்லியிருக்கான்.

அப்புறம் முக்கால்வாசி காதல் கதை மாதிரிதான் இதுவும் ஆச்சுது. காதல்னா ஒரு தலைக்காதல்! பிரேக் அப் சோஷல் அப்பவே உஷா மேனன் தன் கல்யாண இன்விடேஷனைத் தந்து எல்லாரையும் அசத்திட்டா! சீனு உடைஞ்சுப் போயிட்டான். அப்புறம் காலம் பறக்க, அந்தப் பறப்புலே கடந்த கால ஏக்க, ஏமாற்ற, தோல்வி பற்றின நினைவுகளும் மறையுது. சிலருக்கு இது சாத்தியமில்லாமலும் போகுது. சீனு இன்னும் அந்தப் பழைய காதல் சிலுவையைச் சுமந்துக்கிட்டிருக்கானோ என்னமோ!

**பு**திய பேக்கட் சிகரெட்டுடன் திரும்பிய சீனு என்னைச் சில விநாடிகள் ஊன்றிப் பார்த்தான்.

''என்ன... கதையை ஃபாலோ பண்றியா? மேலே கேளு... வராக மூர்த்தியின் பேத்திக்கு எவ்வளவோ நல்ல வரன்கள் வர ஆரம்பிச்சுது. ஆனா இவரு ஏதாவது காரணம் காட்டி எல்லாத்தையும் கலைச்சுடறாரு. புது வரன் வருவதும், இவரு இடை-

பேசாத வார்த்தைக்கு நீ எஜமான்; பேசின வார்த்தை உனக்கு எஜமான்!
— ஆங்கிலப் பழமொழி
— எஸ். முகம்மது யூசுப்.

# நியூட்ரமுல்

## வீரர்களை உருவாக்குகிறது-

அனைத்து
கோக்கோ-மால்ட்
பானங்களையும் விட
அதிக பால்
அடங்கியது.




மிக நேர்த்தியான பால், மால்ட், கோக்கோ இவற்றின் சேர்க்கையே போதும்...நியூட்ரமுல் பரம்பரையின் சக்திக்கு! நியூட்ரமுல் எல்லா வீரர்களின் உடலும் உள்ளமும் உரம் பெற!

## ஒவ்வொரு கோப்பையும் ஊரமூட்டும்

daCunha/GCM/147/88/TAM

# ஹாஃஃ!

## புதிய ஸிபாகா டாப் டூத்பேஸ்ட்...
## ஒவ்வொரு சுவாசமும் புத்துணர்ச்சிமயம்.






முன்னைவிட
சிறந்த சுவை
அதிக நுரை

RCA/CT/14186-TM-1

ஸிபாகா டாப்பில் நன்கு பரவும் விசேஷ பொருள் உண்டு. இது உடனடியாக வாய் முழுதும் பரவி, பற்சிதைவை உண்டாக்கும் நுண்கிருமிகளை அழித்து, வாய் துர்நாற்றத்தைத் தடுக்கிறது; உங்கள் வாயையும், பற்களையும் துப்புரவாக சுத்தம் செய்யும் போதே, உங்கள் சுவாசத்திற்கு முழுமையான புத்துணர்ச்சியையும் தருகிறது.

**சுவாசத்தின் புத்துணர்ச்சியை சோதித்துப் பாருங்கள் இப்படி... ஹா ! ஸூப்பர் ஃப்ரெஷ்ஷ்... ஸிபாகா டூத்பேஸ்ட்.**



**முழுமையான புத்துணர்ச்சி
வாய்க்கு முழுப் பாதுகாப்பு**

# ஸிபாகா டாப்
டூத்பேஸ்ட்

இந்துஸ்தான் ஸிபா காய்கியின் தமிழக தயாரிப்பு

யிலே புகுந்து கெடுப்பதும் தொடருது. அப்பா மனம் தெரியாமே அவரு பையனும் குழம்பறாரு. பேத்திக்கு வயசு ஏறிண்டே போகுது.''

''அவரோட மனசாட்சி குத்தலியா?''

''குத்தாமே இருக்குமா? தூக்கம் போச்சுது. தன் தவறு அவருக்கே புரியுது. பேத்தியோட வாழ்வைக் கெடுக்கறோம்னு அவருக்கு நல்லாவே தெரியுது... ப்ச்சு... நம்ம மனசு இருக்குதே அது ரொம்பவும் விந்தையானது. நியாய அநியாயத்தை மீறி மனோ ராஜ்யத்திலே ஒரு மர்ம ஆட்சி நடக்குது. சமுதாயம், சம்பிரதாயம், சட்டம் இவற்றையெல்லாம் மீறி உள் மனம் போடும் கூச்சல்களை எப்படி அடக்கறது? வராக மூர்த்தியை நான் தெளிவாப் புரிஞ்சுக்கிட்டேன். அவரு என் கிட்டே எதையும் மறைக்கல்லே. என்னோட ட்ரீட்மெண்டை ஆரம்பிச்சேன்.''

**ச**ற்று பேச்சை நிறுத்தினான் சீனு. நான் சட்டென்று கேட்டேன் — ''உன் பேத்தி உஷா எப்படியிருக்கா?'' சீனு கொஞ்சம் திணறி விட்டான்.

''என்னடா இது திடீர்னு உஷா பற்றி விசாரணை?''

''இல்லே... உஷா மேனன் பற்றி யோசிச்சேன்... அப்படியே உன் பேத்தி உஷா ஞாபகம் வந்துடுச்சு!''

சீனுவின் முகத்தில் கசப்பான மாறுதலைத் தேடி ஏமாந்தேன். சாதாரணமாக உணர்ச்சி மோதல் ஏதுமின்றிப் பேசினான்.

''ப்ச்சு... எனக்குப் புரியறது! வராக மூர்த்தி தன் மனைவியினிடம் வைச்ச பிரியத்தையும், நான் உஷா மேனன் மேல் வைச்ச ஆசையையும் சம்பந்தப்படுத்திப் பார்க்கறே! அப்படித்தானே...?''

''உஷா மேனனை உன்னாலே மறக்க முடியலே... அவள் நினைவு நீடிக்கத்தான், ஆறு மாசம் முன் பிறந்த உன் முதல் பேத்திக்கு உஷான்னு பேர் வைச்சே... உண்மையா? பொய்யா?''

''இதுலே விகல்பம் எங்கே வருது?''

''காதல் தோல்விங்கற காயம் உன் நெஞ்சுலே இருக்கு. பேத்திக்கு அவ பெயரை வைச்சு மருந்து போட்டுக்கறே! முப்பது வருஷமா, எவனுக்கோ மனைவியாயிட்ட ஒருத்தியை, மனசிலே சுமக்கிறே!''

''ப்ச்சு.. உஷா மேனன் மேலே நான் வைச்சிருந்தது சரீர சம்பந்தமான காதல் இல்லே... எனக்கு அவள் ஒரு தேவதையா ஒரு உருவகம்... இப்போ இந்த வயசுலே, அந்த நினைவுக்குப் புனிதமா ஓர் அஞ்சலி செலுத்த வாய்ப்பா, பேத்திக்கு அவள் பெயரை வைச்சேன்! எனக்கு ஓர் இழப்பு வந்துச்சு. ஆனா அதை நான் ஓர் இனிய நினைவா மட்டும் மாத்திக்கிட்டு யதார்த்த வானத்திலே பறந்தேன். ஆனா வராக மூர்த்தி தன்னோட இழப்பின் காரணமா, தன்னையும் இருட்டறையிலே வைச்சுக்கிட்டு, அந்த இழப்பைச் சுமையா நெஞ்சுலே ஏத்திக்கிட்டு லௌகீக பள்ளத்துலே மூழ்க



ஒருவருக்கு அமைச்சர் பதவி போய் விட்டதென்றால் அவர் குடியிருக்கும் அரசாங்க பங்களாவைக் காலி செய்து விட வேண்டுமல்லவா? அப்படி காலி செய்யாமல் அதிக காலம் அதிலேயே குடியிருந்த நபர் தினேஷ் சிங். பதவியற்ற நிலையில் பதினேழு வருஷம் அரசு பங்களாவில் குடியிருந்து ஒரு சாதனை படைத்திருக்கிறார்!

— சம்பத் குமாரி.

ஆதாரம்: இல்லஸ்டிரேட்டட் வீக்லி.

ஆரம்பிச்சுட்டாரு...''

சீனுவின் விளக்கம் எனக்குப் போதுமானதாக இருந்தது. குரலைச் செருமி, சரி செய்து கொண்டு, வராக மூர்த்தி பற்றி மீண்டும் பேச்சைத் திருப்பினேன்.

''வராக மூர்த்தியைக் குணப்படுத்தினியா?''

''நீ என்ன நினைக்கறே?''

''இல்லேன்னா இப்போ அவர் கதையை ஏன் சொல்லப் போறே?''

''எவ்வளவோ சிகிச்சை தந்தேன். குறிப்பா அவரு சமாதானம் அடையக் காரணமா நான் நினைக்கிற சம்பாஷணை இதுதான் — மிஸ்டர் வராக மூர்த்தி, மறு பிறவியை நம்பறீங்களா? — நம்பறேன் — நீங்க இன்னும் எத்தனை வருஷங்கள் வாழ விரும்பறீங்க? — விதிச்ச வரைக்கும். — அடுத்த ஜென்மத்துலே என்னவா பொறக்க ஆசை? — மனுஷனாத்தான் — உங்க பேத்தி வயித்துலே மகனாகப் பொறக்கச் சம்மதமா? — கொடுத்து வைச்சிருக்கணும்! — பார்த்தீங்களா... உங்க மனைவிதான் உங்க பேத்தியா பொறந்தா. அப்புறம் பேத்திதான் உங்களைப் பெத்தெடுக்கப் போற தாய்! என்ன தெரியறது! உடம்பு சட்டைதான்! புனரபி மரணம் புனரபி ஜனனம். பட்டினத்தார் பேசுவாரே... ஒரு பிடி நீறும் இல்லாத உடம்பை நம்பும் பேதைமை பற்றி... வராக மூர்த்தியை யோசிக்க விட்டேன். பத்து நாள்லே, பேத்தியோட கல்யாண இன்விடேஷனை எடுத்துக்கிட்டு என்கிட்டே வந்தாரு!''

''சபாஷ்!'' என்றேன் நான்.

''தேங்க்ஸ்!'' என்றான் அவன்.

# அதோ அந்தப் புராண காலத்தில்... அஞ்ஞாதவாசம் புரிந்த பாண்டவர்களின் ஆபரணங்களைப் பாதுகாத்தது எது...? அர்ச்சுனனின் மந்திரசக்தி வாய்ந்த தோற்பேழையே அது.

விராட தேசத்தில் மறைந்து வாழ்ந்த காலத்தில் பாண்டவர்கள் தமது மதிப்பு மிக்க ஆபரணங்களைப் பாதுகாத்து வைக்க அர்ச்சுனனிடம் வேண்டிக் கொண்டனர்.

அர்ச்சுனன் தனது அளவற்ற தவவலிமையால் தோலினால் அரக்க வடிவமொன்றைச் செய்து அதில் வலிமைமிக்க ஆயுதங்களையும், அரசகுல ஆபரணங்களையும் இட்டு வன்னிமரமொன்றில் பொதிந்து வைத்தான்.

இதுவே உலகின் முதல் **'பாதுகாப்புப் பேழை'**.

இந்த வரலாற்றை நமக்குத் தருவது மகாபாரதம். இன்றைய பாரதத்தில் இத்துறையில் புதிய வரலாறு படைப்பவை **சக்தி** பாதுகாப்பகங்கள்.

உங்கள் மதிப்புமிக்க உடைமைகளை உங்களுக்கு மட்டுமே தெரியும் வகையில் பேணிப் பாதுகாத்து வைக்க நீங்கள் சிரமப்படத் தேவையே இல்லை.

உங்களுக்காக அதை **சக்தி** பாதுகாப்பகங்கள் எளிமையாக, இனிமையாகச் செய்து தருகின்றன.

பாதுகாப்பிற்கும், நம்பிக்கைக்கும் முழுவதும் பாத்திரமான **சக்தி பாதுகாப்பகங்கள்.**

**குளிர்சாதன வசதியுடன் நீங்கள் உங்கள் பாதுகாப்புப் பேழைகளைப் பயன்படுத்த, இனிய வரவேற்பு நல்கக் காத்திருப்பவை.**

---

| | | |
|---|---|---|
| தமிழகத்தில் | கோவை: | அவிநாசி சாலை, ஆர்.எஸ். புரம் |
| | சென்னை: | தி. நகர், அண்ணாநகர், அடையாறு, அசோக் நகர், மைலாப்பூர். |
| | | பொள்ளாச்சி, சேலம், திருநெல்வேலி. |
| கேரளத்தில் | | எர்ணாகுளம், திருச்சூர் மற்றும் திருவனந்தபுரம் |

சக்தி
பாதுகாப்புப் பெட்டகங்கள்

200 கோடி ரூபாய் புழக்கமுள்ள சக்தி குழுவின் ஓர் அங்கம்.




சக்தி பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்:
475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர் 641 018.
நிர்வாகத் தலைவர்: எஸ்.என். பய்.

UIPC:SSV:I:88



இவர்தான் முதல்வர்...

# மதிப்புக்குரியவர்களின் நன்மதிப்பைப் பெற்ற செழியன்

தேசப்பற்று சிறிதும் இல்லாமல், மாநில சுயாட்சி, இந்தி எதிர்ப்பு, பகுத்தறிவுக் கொள்கை என்று சமயத்திற்குத் தகுந்தவாறு தமிழக மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டி ஆட்சியைப் பிடித்தது தி. மு. க.

திரைப்படங்கள் மூலம் பாமர மக்களின் ஆதரவைப் பெற்று ஆட்சி அமைத்த எம். ஜி. ஆரின் பத்தாண்டு கால ஆட்சி, சத்துணவுத் திட்டத்தைத் தவிர வேறு எந்தப் பயனுள்ள திட்டத்தையும் உருவாக்காததுடன், தி. மு. க. ஆட்சியின் ஊழல் சாதனைகளை முறியடித்து, பலரைக் கோமஸ்வரர்களாக்கியது. கூட்டமாகக் கொள்ளையடித்த இக்கோமஸ்வரர்களே இன்று மாஜி சினிமா நடிகைகளான ஜானகி, ஜெயலலிதா ஆகியோரின் பின்னால் பிரிந்து நின்று ஒருவரையொருவர் அம்பலப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அடுத்த முதல்வராக வருவதற்கு இவர்களுக்கு இருக்கின்ற ஒரே தகுதி, சினிமா நடிகைகள் என்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை. இவர்களை ஆட்சியில் அமர்த்தினால் ஊழல் ஆட்சியே தொடரும்.

இதற்கிடையில் இ. காங்கிரஸ், தனது தொலைக்காட்சி, வானொலிப் பிரசாரம் மூலம், அதன் தலைவர் கருப்பையா மூப்பனாரைப் பிரபலப்படுத்த முனைகிறது. கோடி கோடியாகப் பணத்தைக் கொட்டி மக்களை மயக்க எண்ணுகிறது. இந்நாள் வரை தி. மு. க., அ. தி. மு. க. வுடன் கூட்டு வைத்துக் கொண்டு அவர்களின் ஊழல்களுக்குத் துணை நின்றவர்கள் இனி நல்லாட்சி அமைப்பார்கள் என்பது என்ன நிச்சயம்?

புதிய எழுச்சியை 1977 – இல் உருவாக்கி ஆட்சிப் பொறுப்பை ஏற்ற ஜனதா, இரண்டரை ஆண்டு காலம் மிகச் சிறப்பாக ஆட்சி செய்தது. ஆனாலும் அவர்களது ஒற்றுமையின்மை என்ற பலவீனமே அவர்களைக் கவிழ்த்து விட்டது. இத்தகைய உட்கட்சிப் பூசல்கள் தமிழக ஜனதாவில் ஏற்படாது. ஏனெனில் முழுக்க முழுக்கக் கண்ணியம் நிறைந்த காமராஜரால் வளர்க்கப்பட்ட அவரது ஸ்தாபன காங்கிரஸ் தொண்டர்கள் மட்டுமே ஜனதாவில் இருக்கின்றனர். இக்கட்சி, தனி நபர் வழிபாடு நிறைந்த கட்சி அல்ல. இதன் தலைவர்கள் எல்லாம் இரண்டு வருடத்திற்கொரு முறை தொண்டர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்களே.

ஜனதாவின் தமிழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இரா. செழியன், அரசியல் நாகரிகம் மிகுந்த பண்பட்ட தலைவர். நாடாளுமன்றத்தைத் தம் நாவன்மையால் அதிர வைத்தவர். பொருளாதாரத்தைக் கரைத்துக் குடித்தவர். சிறந்த நிர்வாகி. அகில இந்தியத் தலைவர்களின் அன்பையும், நம்பிக்கையையும் பெற்றவர். வடநாட்டுத் தலைவர்கள் அனைவருமே இவரை "இரா" என்றே அன்புடன் அழைப்பர்.

தமிழகத்து அரசியல் சூழ்நிலைகளையும், பொருளாதாரத் தேவைகளையும் இவர் நன்கு உணர்ந்தவராதலால், எல்லா வகைகளிலும் தமிழ்நாடு எப்படி முன்னேற வேண்டும் என்பதில் தெளிவான கருத்து இவருக்கு உண்டு.

'நாம் அனைவரும் பெருமை கொள்ளத் தக்க விதத்தில் வலுவான தமிழகத்தை உருவாக்க செழியன் மேற்கொண்டுள்ள முயற்சிக்கு நீங்கள் துணைபுரிவீர்கள் என்று நம்புகிறேன்' – இப்படிக் கூறியிருப்பவர் பழுத்த தேசபக்தரும், முன்னாள் கர்நாடக முதல்வருமான நிஜலிங்கப்பா.

இவர் மட்டுமல்ல; ஜெயபிரகாஷ் நாராயணன், அவர்களும் தமது 'மொத்தப் புரட்சி' புத்தகத்தை "அன்புடன் 'இரா'" அவர்களுக்கே சமர்ப்பணம் செய்தார். இந்திரா, மொரார்ஜி போன்ற பிரதமர்கள் கூட, 'பட்ஜெட்' குறித்து, 'இரா'வின் கருத்து என்ன?" என்பதையே விசாரிப்பார்கள்.

இப்படிப்பட்ட ஒருவரை, நம் முதல்வராகப் பெற்றால், தமிழகம் முன்னேற்றப் பாதையில் செல்லும். ஹெக்டே ஆட்சியில், அண்டை மாநிலமான கர்நாடகா, எவ்வாறு ஒரு தன்னிறைவு பெற்ற மாநிலமாகத் திகழ்கிறதோ, அவ்வாறு நம் தமிழகமும் பலன் பெற்றுச் சுபிட்சம் அடையும். மக்கள் மனம் வைத்தால், செழியன்தான் முதல்வர்!

— பாலரவிகுமார், சென்னை – 49.



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 10

## சூடாமணி விஹாரம்

பூம்புகார் என்னும் காவிரிப்பட்டினத்தைக் கடல் கொள்ளை கொண்டு போய்விட்டது அல்லவா? அதற்குப் பிறகு சோழ வள நாட்டின் முக்கிய துறைமுகப் பட்டினம் என்ற அந்தஸ்தை நாகைப்பட்டினம் நாளடைவில் அடைந்தது. பொன்னி நதி பாய்ந்து இயற்கை வளம் செறிந்திருந்த சோழ நாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள எத்தனையோ அயல் நாட்டார் ஆவல்கொண்டிருந்தனர். பெரிய பெரிய மரக்கலங்களிலே வர்த்தகப் பண்டங்கள் வந்து இறங்கியபடி இருந்தன. முத்தும் மணியும் வயிரமும் வாசனைத் திரவியங்களும் கப்பல்களில் வந்து இறங்கியதோடு அரபு நாட்டுக் குதிரைகளும் விற்பனைக்காக வந்து இறங்கின.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரின் காலத்தில் நாகைப்பட்டினம் சிறந்த மணிமாட நகரமாயிருந்தது. அந்த நகரத்தைக் கண்ட நம்பி ஆரூரர்,

> "காண்பினிய மணிமாடம் நிறைந்த நெடு வீதிக்
> கடல் நாகைக் காரோணம் மேவி யிருந்தீரே!"

என்று வர்ணித்தார். கடல் நாகைக் காரோணத்தில் மேவியிருந்த காயாரோகணப் பெருமானிடம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் என்ன பொருள்கள் வேண்டுமென்று கேட்டார் தெரியுமா? மற்ற ஊர்களிலே போலப் பொன்னும் மணியும் ஆடை ஆபரணங்களும் கேட்டதோடு, நாகைப் பட்டினத்திலே ஓர் உயர்ந்த சாதிக் குதிரையும் கேட்டுப் பெற்றுக் கொண்டார்!

> "நம்பிதாமும் அந்நாட்போய்
> நாகைக் காரோணம் பாடி
> அம்பொன் மணிப்பூண் நவமணிகள் ஆடை சாந்தம் அடற்
> பரிமா"

ஆகியவை பெற்றுக் கொண்டு திருவாரூர் திரும்பிச் சென்றதாகப் பெரிய



புராணம் கூறுகிறது.

நாகைப்பட்டினத் துறை முகத்தில் வந்து இறங்கிய அரபு நாட்டுக் குதிரைகளைப் பார்த்ததும் நாயனாருக்கும் குதிரை ஏறிச் சவாரி செய்ய வேண்டும்என்றுதோன்றிவிட்டதுபோலும்!

நாகைப்பட்டினத்தைப் பற்றிப் புராணம் வர்ணிப்பது ஒரு புறமிருக்க, சரித்திர பூர்வமான கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அந்நகரத்தைப் பற்றிச் சொல்லியிருக்கின்றன.

**“பல கோயில்களும், சத்திரங்களும், நீர்நிலைகளும், சோலைகளும், மாடமாளிகைகளும் நிறைந்த வீதிகளையுடைய** நாகைப்பட்டினம்” என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்த நகரை வர்ணிக்கின்றன.

அதே ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்நாளில் நாகைப்பட்டினத்தில் புகழ்பெற்று விளங்கிய சூடாமணி விஹாரம் என்னும் பௌத்த ஆலயத்தைப் பற்றியும் அதன் வரலாற்றையும் கூறுகின்றன.

மலாய் நாடு என்று இந்நாளில் நாம் குறிப்பிடும் தீபகற்பம் அக்காலத்தில் ஸ்ரீ விஜய நாடு என்னும் பெயரால் பிரசித்தி பெற்றிருந்தது. அந்த நாட்டில் ஒரு முக்கிய நகரம் கடாரம். அந்த மாநகரைத் தலைநகரமாக வைத்துக் கொண்டு நாலா திசையிலும் பரவியிருந்த மாபெரும் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தை நெடுங்காலம் ஆண்டு வந்தவர்கள் சைலேந்திர வம்சத்தார். அந்த வம்சத்தில் **மகரத்துவஜன் சூடாமணி வர்மன்** என்னும் மன்னன் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கினான். அவ்வரசன் **“இராஜ தந்திரங்களில் நிபுணன்; ஞானத்தில் ஸுர குருவான பிரகஸ்பதியை ஒத்தவன்; அறிவாளிகளான தாமரை மலர்களுக்குச் சூரியன் போன்றவன்; இரவலருக்குக் கற்பகத் தருவாய் விளங்கினான்”** என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் வியந்து புகழ்ந்து கூறுகின்றன.

அத்தகைய பேரரசனின் மகன் மாற விஜயோத்துங்க வர்மன் என்பவன் தன் தந்தையின் திருநாமம் நின்று நிலவும்படியாக **“மேருமலையையொத்த சூடாமணி விஹாரத்தை நாகைப் பட்டினத்தில் கட்டினான்”** என்றும் அச்செப்பேடுகள் கூறுகின்றன.

கடாரத்து அரசனாகிய மாற விஜயோத்துங்கன் நாகைப்பட்டினத்துக்குவந்துபுத்தவிஹாரத்தைக் கட்டுவானேன் என்று வாசகர்கள் கேட்கலாம்.

சோழவள நாட்டுடன் நீடித்த வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த அயல் நாடுகளில் ஒன்று ஸ்ரீ விஜய நாடு. அந்நாட்டுப் பிரஜைகள் பலர் நாகைப்பட்டினத்துக்கு வந்து நிரந்தரமாகவே குடியேறியிருந்தனர். வேறு பலர் அடிக்கடி வந்து திரும்பினர். கடாரத்து அரசனும் அவனுடைய குடிகளும் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் புத்தரை வழிபடுவதற்கு வசதியாயிருக்கட்டும் என்றுதான் அம்மன்னன் நாகைப்பட்டினத்தில் சூடாமணி விஹாரத்தைக் கட்டினான். புத்த மதத்தின் தாயகம் பாரத தேசமாயிற்றே என்ற காரணமும் அவன் மனத்தில் இருந்திருக்கலாம்.

தமிழகத்து மன்னர்கள் எக்காலத்திலும் சமய சமரசத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகையால் அவர்கள் நாகைப்பட்டினத்தில் சூடாமணி

விஹாரம் கட்டுவதற்கு அனுமதி கொடுத்தார்கள். அனுமதி கொடுத்தது மட்டுமா? அவ்வப்போது அந்தப் புத்தர் கோயிலுக்கு நிவந்தங்களும் இறையிலி நிலங்களும் அளித்து உதவினார்கள்.*

விஜயாலய சோழரின் காலத்திலிருந்து சோழ மன்னர்கள் சிவ பக்தியில் திளைத்தவர்களாயிருந்தார்கள். ஆதித்த சோழரும், பராந்தக சோழரும், கண்டராதித்தரும் சைவப் பற்று மிக்கவர்கள். பற்பல சிவாலயத் திருப்பணிகள் செய்வித்தார்கள். எனினும் அவர்கள் பிற மதங்களைத் துவேஷிக்கவில்லை. தங்கள் இராஜ்யத்தில் வாழும் பிரஜைகள் எந்தெந்த மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் அவர்களையும் அவர்களுடைய மதங்களையும் நடுநிலைமை தவறாமல் பராமரித்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது முன்னோர்களைக் காட்டிலும் சில படிகள் முன் சென்றார். புத்தப் பள்ளிகளுக்கு விசேஷச் சலுகைகள் அளித்தார். இதனால் சோழ சாம்ராஜ்யத்தில் அச்சமயம் வாழ்ந்திருந்த பௌத்தர்கள் அனைவரும் மிக்க உற்சாகம் கொண்டிருந்தார்கள். இலங்கையில் அருள்மொழிவர்மர் இடிந்து போன புத்த விஹாரங்களைப் புதுப்பிக்கும்படி ஏற்பாடு செய்தது அவர்களுடைய உற்சாகத்தை மேலும் அதிகமாக்கியிருந்தது.

அப்படியெல்லாமிருக்க, இன்று அந்தப் பெயர் பெற்ற சூடாமணி விஹாரத்தில் நேர்ந்த குழப்பத்துக்குக் காரணம் என்ன? பிக்ஷுக்கள் நிலை கொள்ளாமல் அங்குமிங்கும் பரபரப்பாக ஏன் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்? சூடாமணி விஹாரத்தின் வாசற்புறத்தில் என்ன அவ்வளவு இரைச்சலும் கூக்குரலும்? — நல்லது; நாமும் சேந்தன் அமுதனைப் பின்பற்றிச் சென்று பார்ப்போம்.

சேந்தன் அமுதனும் மற்ற இருவரும் கால்வாய் வழியாகப் படகைச் செலுத்திக் கொண்டு சூடாமணி விஹாரத்தின் உட்பகுதிக்கே வந்துவிட்டதாகச் சொன்னோம். அங்கே ஒருவரையும் காணாமையால் சேந்தன் அமுதன் தட்டுத் தடுமாறி வழி தேடிக் கொண்டு விஹாரத்தின் வாசற் பக்கம் போய்ச் சேர்ந்தான். அங்கேதான் பொது மக்கள் வந்து வழிபடுவதற்குரிய புத்தர் பெருமானின் சைத்யம் என்னும் கோயில் இருந்தது. பக்தர்கள் பலர் அந்தக் காலை நேரத்தில் தாமரை மலர்களும் செண்பகப் பூக்களும் மற்ற பூஜாத் திரவியங்களும் நிறைந்த தட்டுக்களை ஏந்திக் கொண்டு வந்திருந்தார்கள். ஆனால் வந்த காரியத்தை அவர்கள் மறந்து விட்டதாகத் தோன்றியது. சைத்யத்தில் ஏறுவதற்குரிய படிகளில் புத்த பிக்ஷுக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கிக் கீழே நின்றவன் ஒருவன் ஏதோ சொல்லிக் கொண்டிருப்பதைச் சேந்தன் அமுதன் கண்டான். பிக்ஷுக்கள் சிலருடைய கண்களில் கண்ணீர் ததும்பி நிற்பதையும் பார்த்தான். கீழே நின்ற பக்தர்களில் பலர் வழக்கப்படி "சாது! சாது!" என்று கோஷிப்பதற்குப் பதிலாக, "ஆஹா!" "அடடா!" "ஐயோ!" என்று அங்கலாய்த்துக் கொண்டிருப்பதையும் கவனித்தான்.

அருகில் நெருங்கிச் சென்று சிறிது நேரம் கேட்ட பின்னர் விஷயம் இன்னது என்று தெரிந்தது. பிக்ஷுக்களிடம் பேசிக் கொண்டிருந்தவன் பார்த்திபேந்திரனுடைய கப்பலிலே இருந்த

---

* இந்தக் கதை நடந்த காலத்திற்குப் பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு ஆனைமங்கலம் கிராமத்தையும் அதைச் சார்ந்த பல ஊர்களையும் முற்றூட்டாக அதாவது எந்த விதமான வரியும் விதிக்கப்படாத இறையிலி நிலமாகத் தானம் அளித்தான். இந்த நில தானத்தை இராஜராஜனுடைய குமாரன், சரித்திரப் புகழ்பெற்ற இராஜேந்திர சோழன், — செப்பேடுகளில் எழுதுவித்து உறுதிப்படுத்தினான். இவைதான் ஆனைமங்கலச் செப்பேடுகள் என்று கூறப்படுகின்றன. மொத்தம் இருபத்தொரு செப்பேட்டு இதழ்கள். ஒவ்வொன்றும் 14 அங்குல நீளமும், 5 அங்குல அகலமும் உள்ளனவாய், ஒரு பெரிய செப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன. இச்செப்பேடுகள் சமீப காலத்தில் தப்பல் ஏறிக் கடல் கடந்து சென்று ஐரோப்பாவில் ஹாலந்து தேசத்தில் உள்ள லெயிடன் என்னும் நகரத்தின் காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன! ஆகையினால் இச்செப்பேடுகளை 'லெயிடன் சாஸனம்' என்றும் சில சரித்திர ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவதுண்டு.

மாலுமிகளில் ஒருவன். கப்பல் முதல் நாள் இரவு நாகைப்பட்டினத்துக்கு வந்து விட்டது. மாலுமிகள் கரையில் இறங்கியதுமே இளவரசரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்தியைச் சிலரிடம்சொல்ல, அது நகரமெல்லாம் பரவி விட்டது. அச்செய்தி உண்மை தானு என்று அறிய அதிகாலையில் அம்மாலுமிகளில் ஒருவனைச் சூடா மணி விஹாரத்தின் பிரதம பிக்ஷு அழைத்து வரச் செய்தார். அவன் தான் அறிந்ததை அறிந்தபடி கூறினன். "சுழற்காற்று அடித்தபோது இளவரசர் கடலிலே குதித்தவர் திரும்பி வரவேயில்லை" என்று துயரக்குரலிலே சொன்னன்.

அப்போது அக்கூட்டத்திலே விம்மி அழும் குரல்கள் பல எழுந்தன.

பிரதம பிக்ஷுவின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகித் தாரை தாரையாக வழிந்தது.

அவர் குனிந்த தலை நிமிராமல் படிகளில் ஏறிச் சென்று சைத்யத்தைத் தாண்டி விஹாரத்துக்குள் பிரவேசித்தார். மற்ற பிக்ஷுக்களும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள். சேந்தன் அமுதனும் அவர்களோடு வந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை.

பிரதம பிக்ஷு மற்றவர்களைப் பார்த்துச் சொன்னர்: — "புத்த பகவானின் கருணை இப்படியா இருந்தது? பற்பல மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தேனே? சக்கரவர்த்தியைப் பார்க்கச் சமீபத்திலே தஞ்சாவூருக்குப் போயிருந்தேன், பாருங்கள்! அச்சமயம் இலங்கையில் அருள்மொழிவர்மரின் அற்புதச் செயல்களைப் பற்றிக் கூறினேன். அதையெல்லாம் இளையபிராட்டி குந்தவை தேவியும் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு என்னைத் தனியாக வரவழைத்து இந்த விஹாரத்தையொட்டி ஆதுரசாலை ஒன்று ஏற்படுத்த வேண்டும் என்றும் அதற்குத் தேவையான நிவந்தங்கள் அளிப்பதாகவும் கூறினர். அதுமட்டுமா?' ஆச்சாரியரே! நாட்டில் பலவாறு பேச்சுக்கள் நடந்து கொண்டிருப்பதைக் கேட்டிருப்பீர்கள். ஒருவேளை இளவசரசர் சூடாமணி விஹாரத்தில் சில நாள் விருந்தாளியாக இருக்கும்படி நேரும். அவரை வைத்துப் பாதுகாக்க முடியுமா?' என்று குந்தவைப் பிராட்டி கேட்டார். 'தேவி! அத்தகைய பேறு எங்களுக்குக் கிடைத்தால் கண்ணை இமை காப்பது போல்வைத்துப் பாதுகாப்போம்' என்று கூறினேன். என்ன பயன்! இளவரசரா கடலில் முழுகினர்? இந்த நாட்டிலுள்ள நல்லவர்களின் மனோரதமெல்லாம் முழுகிவிட்டது! சோழ சாம்ராஜ்யமே முழுகிவிட்டது! சமுத்திர ராஜன் இவ்வளவு பெருங்கொடுமையைச் செய்ய எப்படித் துணிந்தான்? அக்கொடியவனைக் கேட்பார் இல்லையா?" என்று கதறினர்.

மற்ற பிக்ஷுக்கள் அனைவரும் மௌனமாகக் கண்ணீர் பெருக்கினர்கள்.

தலைமைப் பிக்ஷு பேசி நிறுத்தியதும் சிறிது நேரம் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் அதுதான் சமயம் என்றுபுத்தபிக்ஷுக்களிடையேபுகுந்து ஆச்சாரியரை அணுக யத்தனித்தான். உடனே அவனைப் பலர் தடுத்தார்கள். "இவன் யார்? இங்கே எப்படி வந்தான்?" என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்கள்.

"ஐயா! அடியேன் பெயர் சேந்தன் அமுதன். தஞ்சையைச் சேர்ந்தவன். உங்கள் தலைவரிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!" என்றான்.

"சொல், சொல்!" என்றார்கள் பலர்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்துவிட்டு ஆச்சாரியர், "இவர்களுக்குத்தெரியக் கூடாத ரகசியம் ஒன்றுமில்லை; சொல்!" என்றார்.

"ஐயா! நோயாளி ஒருவரை அழைத்து வந்திருக்கிறேன்!"

"அது யார் நோயாளி? என்ன நோய்? எங்கே விட்டிருக்கிறாய்?"

"விஹாரத்தின் நடுமுற்றத்தில் விட்டிருக்கிறேன்..."

"எப்படி அங்கே வந்தாய்?"

"கால்வாய் வழியாக நோயாளியைப் படகில் கொண்டு வந்தேன். நடுக்கும் குளிர்க் காய்ச்சல். தாங்கள் உடனே..."

"பகவானே! நடுக்கும்சுரம்தொற்று நோய் ஆயிற்றே! இங்கே ஏன் அந்த நோயாளியை அழைத்து வந்தாய்?

அதிலும் நல்ல சமயம் பார்த்து!....''

''ஆச்சாரியா! அசோக சக்கரவர்த்தி புத்தமதத்தினர் என்று இது காறும் நினைத்திருந்தேன். இப்போது இல்லை என்று தெரிகிறது...''

''அது ஏன் அப்படிக் கூறுகிறாய்?''

''அசோக ஸ்தம்பம் ஒன்றை நான் காஞ்சிக்கு அருகில் பார்த்தேன். அதில் நோயாளிக்குச் சிகிச்சை செய்வதை முதன்மையான தர்மமாகச் சொல்லியிருக்கிறது. நீங்களோ இப்படி விரட்டியடிக்கிறீர்கள்!'' என்றான் அமுதன்.

ஆச்சாரிய பிக்ஷு மற்றவர்களைப் பார்த்து, ''கொஞ்சம் பொறுங்கள்; நான் போய்ப் பார்த்து விட்டு வந்து சொல்லுகிறேன்'' என்று கூறிவிட்டு, ''வா! அப்பனே!'' என்று சேந்தன் அமுதனை அழைத்துக் கொண்டு சென்றார்.

விஹாரத்தின் நடு முற்றத்தில் கால்வாய்க்கு அருகில் ஒரு யுவனும் யுவதியும் இருப்பதைப் பார்த்துப் பிக்ஷு திடுக்கிட்டார். ''இது என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? இந்த விஹாரத்துக்குள் ஸ்திரீகளே வரக்கூடாதே! பிக்ஷுணிகளுக்குக் கூட வேறு தனி மடம் அல்லவா கட்டியிருக்கிறது?''

அருகில் போய் அந்த இளைஞன் யார் என்பதை உற்றுப் பார்த்ததும் பிக்ஷு திகைத்துப் போனார் என்று சொன்னால் போதாது! வியப்பினாலும் களிப்பினாலும் அவரால் சிறிது நேரம் பேச முடியவில்லை.

சந்தேக நிவர்த்திக்காக, ''இளவரசர் அருள்மொழி வர்மர்தானா?'' என்று சேந்தன் அமுதனைக் கேட்டார்.

இது இளவரசர் காதில் விழுந்தது. ''இல்லை, ஆச்சாரியரே! இல்லை! நான் இளவரசனுமில்லை, ஒன்றுமில்லை. இந்தப் பெண்ணும் இந்தப் பிள்ளையுமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறார்கள். நான் ஓர் ஓடக்காரன். சற்று முன் இந்தப் பெண்ணைப் பார்த்து, 'பெண்ணே! என்னை மணம் புரிந்து கொள்வாயா? இருவரும் படகில் ஏறித் தூர தேசங்களுக்குப் போகலாம்' என்றேன். இவள் ஏதேதோ பிதற்றினாள். நான் உலகத்தை ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவனாம்! ஏழை வலைஞர் குலப் பெண்ணாகிய இவள் என்னை மணந்து கொள்ள மாட்டாளாம். நான் சுகமாயிருந்தால் இவளுக்குப் போதுமாம். வருங்காலத்தில் என்னுடைய மகத்தான வெற்றிகளைக் கேட்டு இவள் மகிழப் போகிறாளாம். எப்படியிருக்கிறது கதை! உண்மையில் எனக்குச் சித்தப் பிரமையா? இவர்களுக்கா?''

சேந்தன் அமுதன் ஆச்சாரிய பிக்ஷுவின் காதோடு ஏதோ கூறினான். அதற்கு முன்னாலேயே இளவரசர் சுரவேகத்தினால் நினைவிழந்த நிலையில் பேசுகிறார் என்பதைப் பிக்ஷு உணர்ந்திருந்தார். குந்தவை தேவி தம்மிடம் இளவரசருக்கு அடைக்கலம் தரும்படி கேட்டிருந்ததும் அவருக்கு நினைவு வந்தது.

மற்ற பிக்ஷுக்களைப் பார்த்து அவர், ''இந்தப் பிள்ளைக்கு விஷ சுரம்தான் வந்திருக்கிறது. இவனை வெளியில் அனுப்பினால் இன்னும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வந்துவிடும். இலங்கையில் எத்தனையோ ஆயிரம் பேர் இந்தச் சுரத்தினால் இறந்து போனார்கள். ஆகையால் இந்த இளைஞனை என் அறைக்கு அழைத்துப் போய் நானே பணிவிடையும் சிகிச்சையும் செய்யப் போகிறேன். இடையில் சுரவேகத்தினால் இவன் ஏதாவது பிதற்றினால் அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம்!'' என்றார்.

உடனே பிக்ஷு இளவரசர் அருகிலே நெருங்கி ஒரு கையினால் அவரை அணைத்துத் தூக்கினார். சேந்தன் அமுதன் இன்னொரு பக்கத்தில் இளவரசரைப் பிடித்துக் கொண்டு உதவினான். எல்லாரும் படிகளில் ஏறிச் சென்றார்கள்.

இதோ, இன்னும் சில விநாடி நேரத்தில் படிக்கட்டு முழுவதும் ஏறிவிடுவார்கள். கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசிப்பார்கள். பிறகு

கதவு சாத்தியாகிவிடும். சாத்திஞல் சாத்தியதுதான். அப்புறம் அவரைப் பார்க்க முடியாது.

பூங்குழலி எதிர்பார்த்தபடியே நடந்தது. மாடிப்படி ஏறியதும் கதவு திறந்தது. சேந்தன் அமுதனை மட்டும் வெளியில் நிறுத்தித் தலைமைப் பிக்ஷு ஏதோ கூறினர். பிறகு திறந்த கதவு வழியாக எல்லோரும் பிரவேசித்தார்கள்.

கதவு படார் என்று சாத்திக்கொண்டது. அது பூங்குழலியின் இதயமாகிற கதவையே அடைப்பது போலிருந்தது.

இனி இந்தப் பிறவியில் இளவரசரைப் பார்க்கலாம் என்ற நிச்சயமில்லை. அடுத்த ஜன்மத்திலாவது அத்தகைய பாக்கியம் தனக்குக் கிடைக்குமா? — இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே இளவரசர் மறைவதைப் பார்த்துக் கொண்டு நின்ருள் பூங்குழலி.

## அத்தியாயம் 11

## கொல்லுப் பட்டறை

வந்தியத்தேவன் குதிரையைத் தட்டி விட்டான். பழையாறையைக் குறியாக வைத்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தான். பழையாறையிலிருந்து வந்த பாதை ஒருவாறு ஞாபகம் இருந்தபடியால் யாரையும் வழிகூடக் கேளாமல் உத்தேசமாகத் திசை பார்த்துக் கொண்டு சென்ருன். முதலில் கொஞ்ச தூரம் காட்டுப்பாதை வழியே சென்ருன். குதிரை இதனுல் மிகவும் கஷ்டப்பட்டுப் போனதை அறிந்தான். வல்லவரையனுக்கும் களைப்பு அதிகமாகவே இருந்தது. அவன் சிறிது நேரமாவது அயர்ந்து தூங்கிப் பல தினங்கள் ஆகிவிட்டன. அவ்வப்போது கண்ணை மூடிக் கொண்டு ஆடி விழுந்ததைத் தவிர நிம்மதியாக ஓரிடத்தில் படுத்துத் தூங்கிஞேம் என்பது கிடையாது. பழை



யாறைக்குப் போய் இளவரசியிடம் செய்தியைச் சொல்லிவிட்டால் அப்புறம் அவனுடைய பொறுப்புத் தீர்ந்தது. நிம்மதியாகத் தூங்கலாம். வெகுநேரம் தூங்கலாம்; ஏன், சென்று போன தினங்களுக்கும் சேர்த்து நாள் கணக்கில் தூங்க வேண்டும் என்று திட்டமிட்டான்.

இளவரசி குந்தவையிடம், ''தாங்கள் கூறிய பணியை நிறைவேற்றி விட்டேன்'' என்று சொல்லும்போது தனக்கு ஏற்படக் கூடிய மகிழ்ச்சியை அவன் எண்ணிப் பார்த்தான். தேவியின் முகம் அதைக் கேட்டு எவ்வண்ணம் மலர்ந்து பொலியும் என்பதையும் நினைத்தான். அந்த நினைவு அவனுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது.

இன்னொரு விஷயமும் அவனுக்கு நினைவு வந்தது. காஞ்சியிலிருந்து புறப்பட்டதிலிருந்து எத்தனை பொய்யும் புனைசுருட்டும் அவன் சொல்லியிருக்கிறான்? அவசியம் நேரிட்டதனால்தான் கூறினான். ஆயினும் அதையெல்லாம் நினைக்கும்போது அவனுக்கு உள்ளமும் உடலும் குன்றிப் போயின. இளவரசர் அருள்மொழி வர்மரோடு சிறிது காலம் பழகியதனால் அவனுடைய மனப்போக்கே மாறிப் போயிருந்தது. இராஜரீக காரியங்களில் ஈடுபடுகிறவர்களுக்குச் சாணக்கிய தந்திரங்கள்



தெரிந்திருக்க வேண்டும் என்று அவன் கருதியிருந்தான். அந்த கைய இராஜரீக தந்திரங்களின் மூலமாக அவனுடைய முன்னோர்கள் இழந்து விட்ட ராஜ்யத்தைத் திரும்பிப் பெறலாம் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது. அந்த எண்ணமெல்லாம் இப்போது மாறிவிட்டது. இளவரசர் அருள்மொழி வர்மரின் நேர்மையையும் சத்திய தீரத்தையும் பார்த்த பிறகு அவனுக்குப் பொய் புனைசுருட்டுகளில் வெறுப்பே உண்டாகி விட்டது. அவரைக் காப்பாற்றுவதாக எண்ணிக் கொண்டு மந்திரவாதியின்



"சினிமாக்காரங்க கட்சிங்கறது சரியாத்தான் இருக்கு...?"

"என்னங்க ஆச்சு...?"

"பொதுக் கூட்டம் நடத்தறதுக்கு "லொகேஷன்" பார்க்க வந்திருக்காங்க...!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

காது கேட்க நேற்றிரவு அவன் கூறிய பொய்யையும் எண்ணிக் கொண்டான். அதனால் ஏதாவது விபரீதம் நேராமல் இருக்க வேண்டுமே என்று நினைத்தபோது அவன் நெஞ்சு துணுக்கமுற்றது. அதை வேறு யாராவது கேட்டிருந்தால், ஒருவேளை குந்தவை தேவியிடமே யாரேனும் சொல்லி வைத்தால்? — இளையபிராட்டி நம்பிவிட மாட்டாள்! ஆயினும் எவ்வளவு பெரிய விபத்து?

இனி, இவ்வாறெல்லாம் இல்லாததைப் புனைந்து கூறுவதையே விட்டுவிட வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டும்: அதனால் கஷ்டம் வந்தால் சமாளிக்க வேண்டும். அந்த வீர வைஷ்ணவனைப் போன்றவர்களும் ரவிதாஸனைப் போன்றவர்களும் ஒற்றர் வேலை செய்யட்டும். நமக்கு என்னத்திற்கு அந்தத் தொல்லை? வாளின் துணை கொண்டு நமக்குக் கிடைக்கும் வெற்றி கிடைக்கட்டும். அதுவே போதும். அதனால் உயிரை இழந்தாலும் சரிதான். தந்திர மந்திரங்களையெல்லாம் இனி விட்டுவிட வேண்டியதுதான்.



வ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே சென்றதில் குதிரையின் வேகம் தடைப்பட்டதை அவன் சிறிதுநேரம் கவனிக்கவில்லை. ஏன், குதிரை மீதிருந்து சிந்தனை செய்து கொண்டே போனதில் கொஞ்சம் கண்ணயர்ந்தும் விட்டான். குதிரை ஓரிடத்தில் தடுமாறிக் குனிந்த போது அவன் திடுக்கிட்டு விழித்துக்கொண்டான். குதிரை தனது முன்னங்கால் ஒன்றைத் தரையில் ஊன்றி வைக்க முடியாமல் தத்தளித்தது தெரிந்தது. உடனே கீழே இறங்கினான். குதிரையைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஊனமடைந்ததாகத் தோன்றிய முன்னங்காலை எடுத்துப் பார்த்தான். அதன் அடிப்புறத்தில் ஒரு சிறிய கூரிய கல் பொத்துக் கொண்டிருந்தது. அதை லாகவமாக எடுத்து எறிந்தான். நல்லவேளை: பெரிய காயம் ஒன்றும் படவில்லை. மறுபடியும் குதிரையைத் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்திவிட்டு அதன் முதுகின் மீது ஏறிக் கொண்டான். கப்பலில் அரபு நாட்டார் பேசிக் கொண்டது நினைவு வந்தது.

"தமிழ் நாட்டார் கொடூரமானவர்கள்: அறிவும் இல்லாதவர்கள்! குதிரைகளின் குளம்புக்குக் கவசம் அடிக்காமல் வெறுங்காலினால் ஓடச் செய்கிறார்கள். அப்படி ஓடும் குதிரைகள் எத்தனை நாள் உயிரோடிருக்கும்?"

இதை நினைத்துக் கொண்டே வந்தியத்தேவன் குதிரையை ஓட்டினான்.

# "என் வீட்டிலே கரப்பான் பூச்சியும் கொசுவும் இருக்கவே கூடாது...

## ஃபினிட்டை அடிப்பேன், பூச்சிகளை ஒழிப்பேன்!"

ஃபினிட் சக்தி. அது பாதுகாப்பானது ஆற்றல்மிக்கது. அது வீடு முழுதும் மூலைமுடுக்கெல்லாம் பரவி, பறக்கும் பூச்சிகளையும் ஊர்ந்து செல்லும் பூச்சிகளையும் கொல்கிறது.




**ஃபினிட் சக்தி**

பாதுகாப்பானது. ஆற்றல் மிக்கது



இந்துஸ்தான் பெட்ரோலியம்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
(இந்திய சர்க்கார் நிறுவனம்)

CLARION/B/HP/39/213 TML



# பக்தி
## புத்தகங்களைப் படியுங்கள்

உங்கள் வாழ்க்கையில் ஒரு நாளாவது கீழ்க்கண்ட புத்தகங்களில் உள்ள விளக்கத்தைப்படித்துப் பாருங்கள்.

1. பகவத் கீதை
2. திருவாசகம்
3. ஸ்ரீருத்ரம்
4. லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம்
5. விஷ்ணு புராணம்
6. தேவி பாகவதம்
7. சிவ மஹா புராணம்
8. ஸ்ரீ கந்த புராணம்

எங்களிடம ஸ்வீட் அல்லது காரம் வாங்குபவர்களுக்கு பகவத் கீதை புத்தகமும், மற்றும் அது போன்ற நல்ல (ஆங்கிலம் அல்லது தமிழ்) புத்தகங்களும் வாங்கும் தொகைக்கு ஏற்றாற் போல இலவசமாக வழங்கப்படும்.





அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்குகளை வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

திருமண வைபவங்களுக்கு:— சீர்முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன் குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால், அப்பம் முதலியவை செய்து தரப்படும்.

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2-வது மெயின் ரோடு, காந்திநகர்,
அடையாறு சென்னை-600 020.
போன்:-412557

வீரர்கள் போர்க்களத்துக்குப் போகும் போது மார்பிலே கவசம் தரிப்பார்கள். குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவது என்பது அதிசயமான காரியந்தான். ஆயினும் அம்மாதிரி வேறு தேசங்களில் செய்வதுண்டு என்று முன்னமே கேள்விப்பட்டிருந்தான். முதன் முதலாக எதிர்ப்படும் கொல்லுப் பட்டறையில் இதைப் பற்றிக் கேட்க வேண்டியதுதான். முடியுமானால் இந்தக் குதிரையின் குளம்புக்கே கவசம் அடித்துப் பார்க்கலாம். இல்லாவிடில், இது பழையாறை வரை போய்ச் சேர்வதே கடினம். நடுவில் இது விழுந்து விட்டால் வேறு குதிரை சம்பாதிக்க வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது? யாரிடமாவது திருடத்தான் வேண்டும். சீச்சீ! அந்த நினைவே வந்தியத்தேவனுக்கு வெட்கத்தை உண்டாக்கியது.

காட்டுப் பாதையிலிருந்து உத்தேசமாகக் குதிரையைத் திசை மாற்றி விட்டுக் கொண்டு போய் வந்தியத்தேவன் இராஜபாட்டையை அடைந்தான். வந்தது வரட்டும்: இனிமேல் இராஜபாட்டை வழியாகத்தான் போக வேண்டும். தன்னைத் தெரிந்தவர்கள் யாரும் இந்தப் பக்கத்தில் இருக்க முடியாது. பழுவேட்டரையர் பரிவாரங்கள் பின்னாலேதான் வரும். மந்திரவாதியும் அப்படித்தான். ஆகையால், அபாயம்ஒன்றுமில்லை.மேலும்,இராஜபாட்டையோடு போனால் கொல்லுப் பட்டறை எங்கேயாவது இருக்கும். அதில் குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போட முடியுமா என்று பார்க்கலாம்.

வந்தியத்தேவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சிறிது தூரம் சென்றதும் ஒரு கிராமம் தென்பட்டது. கிராமத்தில் ஏதோ ஒருவிதக் கிளர்ச்சி ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. ஒரு பக்கத்தில் வீதிகளிலும் வீடுகளிலும் தோரணங்கள் கட்டி அலங்கரித்திருந்தார்கள். ஒருவேளை பெரிய பழுவேட்டரையர் இந்தப் பக்கமாய் வரப் போகிறார் என்று அறிந்து இப்படி ஊர் அலங்காரம் செய்திருக்கலாம். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் வருவதற்குள் தான் வெகு தூரம் போய் விடலாம் என்பது நிச்சயம்.

மற்றொரு பக்கத்தில் கிராமத்து ஜனங்கள், — ஸ்திரீகள் புருஷர்கள், வயோதிகர்கள், சிறுவர் சிறுமிகள் அனைவரும், — அங்கங்கே கும்பல் கும்பலாக நின்று கவலையுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். விஷயம் என்னவாயிருக்குமென்று அவனால் ஊகிக்க முடியவில்லை. அவர்களில் சிலர் குதிரையில் வருகிறவனைக் கண்டதும் அவனை நிறுத்தும் எண்ணத்தோடு அருகில் வந்தார்கள். வந்தியத்தேவன் அதற்குஇடங்கொடாமல்குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு மேலே போனான். வீண் வம்புகளில் அகப்பட்டுக் கொள்ள அவன் இஷ்டப்படவில்லை.




ராமத்தைத் தாண்டியதும் சாலை ஓரத்தில் கொல்லுப் பட்டறை ஒன்று இருக்கக் கண்டான். அதைக் கடந்து மேலே செல்ல அவனுக்கு மனம் வரவில்லை. குதிரையை நிறுத்தி விட்டுப் பட்டறைக்குள் சென்றான்.

பட்டறைக்குள் கொல்லன் ஒருவன் வேலை செய்து கொண்டிருக்கக் கண்டான். ஒரு சிறுவன் துருத்தி ஊதிக் கொண்டிருந்தான். வந்தியத்தேவன் உள்ளே பிரவேசித்த அதே சமயத்தில் இன்னொரு மனிதன் பின்பக்கமாக மறைந்ததாகவும் அவனுக்குத் தோன்றியது. ஆனால் இதிலெல்லாம் அவன் கவனம் செல்லவில்லை. கொல்லன் கையில் வைத்துக் கொண்டிருந்த வாள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. அது ஓர் அபூர்வமான வாள்: பட்டறையில் வைத்துக் கொல்லன் அதைச் செப்பனிட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அதன் ஒரு பகுதி பளபளவென்று வெள்ளியைப் போல் பிரகாசித்தது. இன்னொரு பகுதி நெருப்பிலிருந்து அப்போதுதான் எடுக்கப்பட்டிருந்தபடியால் தங்கநிறச் செந்தழல் பிழம்பைப் போல் ஜொலித்தது.

''வாள் என்றால், இதுவல்லவா வாள்?'' என்று வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் எண்ணி வியந்தான்.

(தொடரும்)

**வ**லது பக்க ஓரத்தில் ஒரு முகம். கண்கள் மூடிக் கிடந்தன. உதடு குவிந்து. சோகமா, சந்தோஷமா என்று சொல்ல முடியாத உணர்ச்சி. இரண்டும் கலந்த உணர்வாகக் கூட இருக்கலாம். இடது பக்க ஓரத்தில் முழங்கால்களைக் கட்டிக் கொண்ட கைகளுடன் ஒரு மனிதனின் உடல் ஆணிகளின் மேல் உட்கார்ந்திருந்தது.

ஆணி என்றால் முள் மாதிரி கொஞ்சம். மீதியெல்லாம் தலையில் கொண்டை வைத்துக் கொண்ட ஆணிகள். அந்த மனிதன் அதைப் பற்றியெல்லாம் அக்கறையில்லாமல் தன் சொந்தப் பிரபஞ்சத்தில் ஆழ்ந்திருந்தான். ஆணிகளின் மேல் உட்கார்ந்திருந்தால் வலிக்காதா? இப்படி ஒரு முக பாவம் அதில் ஏற்படுமா?

அவனைச் சுற்றிக் கறுப்பு நிறம் சூழ்ந்திருந்தது. நடுவே அவன் இதயத்திலிருந்து ஓர் ஒற்றை வெள்ளைக்கோடு கறுப்புச் சூழலைத்தாண்டி 'கான்வாஸின்' மூலைக்கு நகர்ந்திருந்தது.

மித்ரன் ப்ரஷை நன்றாகச் சிவப்பு பெயிண்டில் அழுத்தி அந்த வெள்ளைக் கோட்டுக்கு மேல்பக்கமாய் **'Just Be'** என்று எழுதினான். ஜானுவுக்கு அந்தத் தலைப்பு புரியவில்லை. அதைவிட — அந்தப் படமே புரியவில்லை!

கழுத்தைச் சாய்த்துக் கொண்டு ஒரு முறை பார்த்தான், மித்ரன். கவனமாய்த் தன் வேலையில் மனத்தைத் தொலைத்திருந்தான். அந்த இடத்தைப் போர்ஷன் என்றும் சொல்லிவிட முடியாது. 'லாட்ஜ்' என்றும் சொல்லிவிட முடியாது. இரண்டுக்கும் நடுவில் உள்ள ஏதோ ஒன்று. முன்னறையில் ஓவியக் கலைப் புத்தகங்களும் பிரஷ்களும் பல வண்ணப் பெயிண்டுகளும் இறைந்து கிடந்தன. ஜன்னலுக்குப் பக்கமாய் ஒரு சின்ன 'போர்ட்' நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. கீழே வரைந்து முடித்த ஓவியங்கள்.

இந்த ஓவியங்களின் பிரசவம் ஜானுவிற்குத் தெரியும். பிரசவம் பார்த்த தாதி அவள். எட்டு வருஷங்களாய் மித்ரனின் சின்னச் சின்னத் தீட்டல்களில் கூட மனம் மயங்கிப் போனது நிஜம். முதலில் ரசிகையாய் அறிமுகமாகி இப்போது நட்பாய் நெருங்கியாயிற்று.

தமயந்தி

மித்ரனின் நேசம் அலாதியானது. அவன் வாய்விட்டு அவன் மனத்திலிருக்கும் நேசத்தைச் சொல்ல வேண்டும் என்றில்லை. அந்தக் கண்கள் சொல்லும். அந்த இமைகளின் மெல்லிசான படபடப்பு பேசும். 'நானிருக்கிறேன் உனக்கு — நண்பனாய், ஆதரவாய்' என்று மனத்தை அணைத்துக் கொள்ளும்.

ஒவ்வொரு படத்தையும் மித்ரன் வரையும் போது ரசனையையும் மீறி இந்த நேசம்தான் முன்னால் உட்கார்ந்து விமர்சனம் செய்யத் தூண்டும். கலையை மீறியது மனத்தின் நேச அலைகள். நேசம் கூட ஒரு வகையான கலை தான். இதைச் சொன்னால் மித்ரன் சிரிப்பான்.

"உனக்கு எங்கிருந்து ஜானு இப்படியெல்லாம் தோணுது?"

"நான் சொன்னது தப்பா? நேசம் ஒரு கலை இல்லையா?"

மித்ரன் கூர்ந்து பார்ப்பான். நெஞ்சின் அஸ்திவாரத்தில் ஒரு வெள்ளைப் புறா மெதுவாய்ச் சிறகை விரித்து மனத்தை அடைகாப்பது போல மூடிக் கொள்ளும்.

"நேசம் ஒரு கலைன்னு இல்லை ஜானு. நேசம்தான் கலை. ஒரு பொருளைப் பார்த்தவுடனேயே உனக்கு அது பிடிச்சாத்தான் நீ அதை ரசிக்கிறே. அது ஈர்ப்புத்தான். ஆனால் ஈர்ப்புங்கிறது நேசத்தோட ஆரம்ப அடித்தளம். நல்ல முறையில உள்ள நோக்கத்தோட இருக்கிற ஈர்ப்பு நல்லது. அதுல தப்பில்லை.

இந்தக் கலையும் நேசமும்தான் தினமும் சாயங்காலம் ஆபீஸ் முடிந்து வீட்டுக்குப் போகும் முன், வழியில் மித்ரனின் அறையில் எட்டிப் பார்த்து, 'என்ன படம் போட்டீங்க்

# தீர்வுகள்

இன்னிக்கு?' என்று கேட்க வைக்கிறது.

''சார்... டபுள் டீ...''

மேஜை மீது 'டக்'கென்று தம்ளர்கள் வைக்கப்பட்ட சப்தத்தில் ஜானு நினைவு வந்தவளாய்ச் சுதாரித்துக் கொண்டு, திரும்பவும் படத்தைப் பார்த்தாள். பளிச்சென்று சிவப்பு நிறத்தில் தலைப்பு மின்னிற்று — 'Just Be.'

மித்ரன் ப்ரஷைக் கழுவிவிட்டு எதிரே வந்து உட்கார்ந்தான்.

''படம் எப்படியிருக்கு ஜானு?''

பதில் பேசாமல் ஜானு சர்க்கரையை டீயில் கலக்கி நீட்டினாள். ருசியே இல்லாமல் தண்ணீர் மாதிரி இருந்தது டீ. இந்த டீயிடமிருந்து தினமும் தப்பிக்க முடியாது. சாயங்காலம் வரும் போது மித்ரன் அதைக் குடிக்காமல் போகவிட மாட்டான். 'நான் மட்டும் இந்த மாதிரி தண்டனை அனுபவிக்கணுமா...? உனக்கும் உண்டு' என்பான்.



வேறு வழியிருக்காது. தண்ணீரில் சீனி போட்ட இனிப்பு நீரை மூச்சை அடக்கிக் கொண்டு ஜானு குடித்து விடுவாள். எப்படி இதைக் காலையிலும் சாயங்காலமும் மித்ரன் குடிக்கிறான் என்கிற ஆச்சர்யம் எழும்பும்.. 'வேறே வழி...? எதையும் அப்படியே ஏத்துக்கணும்' என்பான். ஆனாலும் அந்த ஆச்சர்யம் ஜானுவிடமிருந்து மறைந்ததில்லை.

''தினம் உங்ககிட்டே கேட்டும் எனக்கு ஆச்சரியம் அடங்கலே மித்ரன். எப்படி இந்த டீயைத் தினமும் குடிக்கிறீங்க?''

''நான் மட்டும் குடிக்கலையே... தினம் உன்னையும் எப்படியும் குடிக்க வெச்சிடுறேனே ஜானு... அதுகூடக் காரணமா இருக்கலாம். ஆமா... படம் எப்படி? சொல்லவே மாட்டேங்கிறே?''

''நிஜத்தைச் சொல்லட்டா?''

''அதான் எனக்குப் பிடிக்கும் ஜானு.''

''எனக்குப் புரியலே.''

மித்ரன் துண்டால் முகம் துடைத்துக் கொண்டு கேசத்தைக் கோதி விட்டுக் கொண்டான். அந்த நிதானம் ஜானுவை என்றைக்கும் பிரமிக்க வைக்கும்.

''என்ன புரியலே ஜானு. உனக்கு இதுலே?''

''முதல்லெ அந்த மனுஷன் யாருன்னு தெரியலே. அதுக்கப்புறம் இந்த ஆணியெல்லாம் என்னன்னு தெரியலே. அதை விட மேலா — இந்த 'Just Be' என்னன்னு தெரியலே.''

மித்ரன் நாற்காலியைப் பின்னால் இழுத்துப் போட்டுக் கொண்டு, உட்கார்ந்தான். டீ தம்ளர்களை ஹோட்டல் ஆள் வந்து எடுத்துச் சென்ற பிறகு நிதானமாய்ச் சொன்னான்.

''எப்படி உனக்கு விளக்குவதென்று எனக்குப் புரியலே. 'Just Be' — ங்கிறதைத் தமிழ்ப்படுத்தினா 'சும்மாயிரு'ன்னு மொழியாக்கம் செய்யணும்.''

''சும்மாயிருப்பது என்பது மனுஷன் துருப் பிடிக்கிற நிலை இல்லேயா மித்ரா?''

''நிச்சயமாக... அதனால் இது 'சும்மாயிருத்தல்' கிடையாது. 'அப்படியே இரு'ன்னு எடுக்கலாம். 'அப்படியே இரு'ன்னா அசைவில்லாம இருன்னு அர்த்தமாயிடும். அசைவில்லாத எதுவுமே வளர்ச்சிக்கு உதவுறதில்லே.''

''பின்னே என்னதான் இதுக்கு அர்த்தம்?''

''Just Be—க்கு அர்த்தம் Just Be—ன்னுதான் நினைக்கிறேன் ஜானு. அதுக்குத் தமிழ்லெ மாத்திரம் இல்லே... இங்கிலீஷ்லியோ வேறு எந்த மொழியிலேயோ கூட சரியான விளக்கம் கிடையாதுன்னு தோணுது.''

''அப்ப இந்த ஓவியம் ஜென்மத்திற்கும் எனக்குப் புரியப் போறதில்லையா?''

''இல்லே ஜானு... காலம் வரணும். இந்த வார்த்தைகளுக்கு மொழியில் அர்த்தம் இல்லாம போகலாம். ஆனால் வாழ்க்கையிலெ நிச்சயமா அர்த்தம் உண்டு. செயலும் நடைமுறையும்தான் எதுக்குமே நல்ல குரு.

நாளைக்கு உனக்கே இப்படி ஒரு சூழ்நிலை ஏற்படலாம். அப்ப இந்த ஆணியும், மனுஷனும், Just Be—யும் உனக்குப் புரியும்.''

''என்னமோப்பா... எனக்குப் புரியலே... இனிமேலும் புரியும்ங்கிற நம்பிக்கை இல்லே... சுத்தமா இல்லே.''

திரும்பவும் ஒரு தடவை அந்தப் படத்தைக் கூர்மையாய்ப் பார்த்தாள். சத்தியமாய் ஒன்றுமே புரியவில்லை.

அவன் அறையை விட்டுக் கிளம்பி, மாடிப்படியில் இறங்கிய போது கீழே இருந்த அறை ஜன்னல்கள் வழியே எட்டிப் பார்த்தன ஆணும் பெண்ணுமாய் முகங்கள்.

மித்ரன் இருந்த போர்ஷனுக்குக் கீழ் போர்ஷனில் இருந்த கஸ்தூரி ஜானுவுடன் வேலை பார்த்தாள். அநேகமாய்ச் சாயங்காலம் ஆபீஸ் முடிந்து மித்ரனின் அறைக்குக் கஸ்தூரியுடன்தான் வருவாள் ஜானு.

கஸ்தூரியுடன் நடந்தால் பதினைந்து நிமிஷ நடை. பேசிக் கொண்டே நடந்தால் மூன்று நிமிஷம் மாதிரி கூடத் தோன்றுது.

''போகலாமா, ஜானு?''

கஸ்தூரி, ஹேண்ட் பாக் தோளில் தொங்க, கையில் இரண்டு மூன்று ஃபைல்கள் வைத்திருந்தாள். நேராய் ஜானுவைப் பார்க்காமல் — பார்க்க முடியாத தவிப்போடு — ஜன்னல் வழியாய் வெளியே பார்த்தாள். ஒரு வாரமாய்க் கஸ்தூரியின் கண்ணில் தயக்கம் இருந்தது. எதையோ மனத்தில் வைத்துக் கொண்டு சொல்ல முடியாமல் இம்சைப்படுகிறாள் என்பது துல்லியமாய்த் தெரிந்தது. ஆனாலும் என்ன என்று சொல்ல மறுக்கிறாள். மௌனமாய் நடந்து 'குட் நைட்' சொல்லிப் பிரிந்து போகிறாள்.

மேஜையைப் பூட்டி விட்டுக் கஸ்தூரியுடன் நடந்த போது, இன்றைக்கும் அமைதி ஆவேசமாய் வீசிற்று. மௌனம் சந்தோஷமான பாஷை மட்டும் இல்லையா? கஷ்டப்படுத்தி ரணப்படுத்தும் கூர்முனை கூட அதற்கு உண்டா? கஸ்தூரியின் இந்த மௌனத்தில் என்ன ரணம் உள்ளது? தம்பிக்கு ஃபீஸ் கட்டக் காசில்லை என்றாளே, அந்தக் கஷ்டமா? குடிகார அப்பாவைத் திருத்த முடியவில்லையே என்கிற ரணமா?

''என்ன கஸ்தூரி... பேசாம நடக்கிறே? ஒரு வாரமா நானும் பார்த்துக்கிட்டுத்தான் வர்றேன். ஏன் பேசாம வர்றே?''

''ஒண்ணுமில்லையே...!''

''ஒண்ணுமில்லேன்னு சொல்ற போதே ஏதோ இருக்குன்னு தெரியுது. உன் குரல் உன் மனத்தில் உள்ள நடுக்கத்தைக் காட்டிக் கொடுத்திடுச்சு கஸ்தூரி. மனமும், முகமும், குரலும், ஒண்ணுக்கொண்ணு சம்பந்தம் உள்ளது. ஒண்ணுலே உள்ள ரணம் அடுத்ததிலே பிரதிபலிக்கும். என்ன விஷயம்னு சொல்லு.''

''எப்படி... சொல்லறதுன்னு தெரியலே...''

''சும்மா சொல்லு... என்னையும் உன்னையும் உன் மனத்தில் இருக்கிற பாரத்தையும் தவிர வேற எதுவுமே இங்கே நடந்து வரலே...''

கஸ்தூரி ஒரு நிமிஷம் கண்களை நேருக்கு நேராய்ப் பார்த்துவிட்டுக் குனிந்து கொண்டாள். பஸ் ஒன்று புகையைக் கக்கிக் கொண்டு கடந்து போனது.

''வந்து... வந்து... ஜானு...''

''என்ன?''

''நீ தினமும் மித்ரனைப் பார்க்க வர்றே, இல்லே?''

''ம். அதுக்கென்ன?''

''வந்து... அதை எங்க 'பில்டிங்'ல உள்ளவங்க தப்பாப் புரிஞ்சிக்கிட்டாங்க. ஒரு வாரத்துக்கு முன்னாலே... ரெண்டு மூணு பொம்பளைங்க சேர்ந்து...''

மேலே பேச முடியாமல் கஸ்தூரி எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்ட தடயம் கழுத்தில் தெரிந்தது.

''சொல்லு கஸ்தூரி... என்ன ஆச்சு?''

''மித்ரன் கிட்டப் போய்ச் சும்மா வம்புக்கு இழுக்கணும்னு... 'நீங்க உங்க ரூமுக்குத் தினமும் வர்ற பெண்ணை லவ் பண்றீங்க தானே'ன்னு கேட்டாங்க. அவர் சிரிச்சுக்கிட்டே இல்லே, இல்லேன்னு சொல்லச் சொல்ல அவரைக் கேள்வியால் திணறடிச்சாங்க...''

''கடவுளே... நிஜமாவா கஸ்தூரி?''

''ம்... சத்தியமா... உங்கிட்ட மித்ரன் சொல்லலையா ஜானு?''

''இல்லையே கஸ்தூரி...''

ஜானுவின் மனத்தில் புதிதாய் ஒரு பாரம் வந்து சௌகர்யமாய் உட்கார்ந்து கொண்டது. கஸ்தூரி பாரம் குறைந்தவளாய் நடக்க ஆரம்பித்தாள். பகிர்தல் மூலம் இடம் மாறிக் கொள்வதுதான் பாரமா? கஸ்தூரியின் பாரம் என்னிடம் பகிரப்பட்டதும் அவள் பாரம் குறைந்து எனக்குக் கூடி விட்டதா?''

மித்ரனின் அறைக்குள் நுழைந்த போது, அவன் நேற்று வரைந்த படத்திற்கு 'ஃபைனல் டச்' கொடுத்துக் கொண்டிருந்தான்.

''உட்கார் ஜானு... ஒரு நிமிஷம். இதை முடிச்சிடறேன்.''

''முடியாது. நான் இப்பவே உடனேயே உங்ககிட்டே பேசணும்.''

கண்களில் கேள்விக்குறியைத் தேக்கிக் கொண்டு மித்ரன் திரும்பிப் பார்த்தான். விரிந்த உதடுகளின் ஓரத்தில் கேள்விக் கோடு ஜனித்தது.

''எதைப் பத்தி ஜானு... அப்படி என்ன அவசரம்?''

''முதல்ல இப்படி உட்காருங்க...!''

உட்கார்ந்தான். கண்கள் சின்னதாகி, 'என்ன, என்ன' என்று கேட்டன. நிச்சயமாய்க் கண் மொழியில் நிஜமான ஏதோ ஒன்று இருக்கிறது. ஜன்மத்திற்கும் பேசுவதை ஒரு நிமிஷக் கண் பார்வை பேசி விடுகிறது.

''என்ன சொல்லப் போறே ஜானு?''

''எங்கிட்டேயிருந்து ஒரு விஷயத்தை மறைச்சிட்டீங்க.''

* தம்மை மயக்கும் ஆசை, பெரும்பாலும் தாமே வேண்டுமென்று திறந்து வைத்த கதவு வழியாகத்தான் உள்ளே புகுகிறது. — ஆர்னல்ட் கிளாஸ்கோ



**மனைவி : பையனை ஏன் அடிக்கிறீங்க?**

**கணவன் : 'சைக்கிள் வாங்கித் தர்றீங்களா? இல்லே, ஃபெயிலாகட்டுமா'ன்னு என்னை பிளாக்மெயில் பண்றான்.**

**— சாணக்கியன்.**

''என்ன?''

''என்னவா...? நிஜமாச் சொல்லுங்க... நெஞ்சுல கைவெச்சுச் சொல்லுங்க.''

''படபடக்காதே ஜானு.... நிதானமாய்ச் சொல்லு. குழப்பாம சொல்லு...''

''ஒரு வாரத்துக்கு முன்னால இங்கேயுள்ள ஒரு நாலஞ்சு பெண்கள் உங்ககிட்டே வரலே?''

''ஆமாம், வந்தாங்க...''

''என்னை நீங்க 'லவ்' பண்றீங்களான்னு கேக்கலே?''

''ஆமாம்...''

''அதை ஏன் எங்கிட்டேயிருந்து மறைச்சீங்க? இன்னிக்கிக் கஸ்தூரி சொல்லித் தெரியாட்டா எனக்குத் தெரிஞ்சிருக்கவே தெரிஞ்சிருக்காது.''

மித்ரன் கைகளை மேலே பரப்பிச் சோம்பல் முறித்தான். அந்த நிதானம் அந்த நிமிஷத்தில் எரிச்சலைத் தந்தது. எப்போதும் ரசிக்கிற நிதானம் நெருஞ்சி மாதிரி குத்திற்று. ஜானு பதற்றமாய் எழுந்து அவன் பக்கத்திலிருந்த மோடாவில் உட்கார்ந்தாள்.

''ஏன் எனக்குச் சொல்லலே மித்ரா?''

''சொல்லி என்ன பிரயோஜனம்?''

''சொல்லியிருந்தீங்கன்னா... நான் இங்கே வர்றதை நிப்பாட்டியிருப்பேன். இப்படிப் பட்ட பேச்சுக்கு இடம் கொடுக்க மாட்டேன்.''

''அதான் சொல்லலே. மத்தவங்களுக்காக நாம வாழலே ஜானு. நமக்காகத்தான் வாழறோம்.''

''ஆனாலும்... நாலு பெண்கள் வம்புக்குன்னு உங்களை இழுத்து வச்சுப் பேசியிருக்கிறப்போ... எப்படி மித்ரா சும்மா இருந்தீங்க?''

''ஏன் கோபப்படலேன்னு கேக்குறியா? பட்டு என்ன லாபம்? சில மனுஷ உறவுகளை இழக்க வேண்டி வந்திருக்கும். அவ்ளோதான்.''

''அவ்ளோதான்னு நீங்க சொல்லிட்டீங்க மித்ரா. என்னாலே... என்னாலே... அப்படி நினைக்க முடியலே. அவங்க ஏன் அப்படிப் பேசணும்? என்ன உரிமை இருக்குது அவங்களுக்கு?''

''அவங்க ஏன் என்கிட்ட கேட்டாங்க தெரியுமா ஜானு? அவங்களுக்கு நேரம் போகணும். பொழுது போகாத நேரத்தை அடுத்தவங்க அந்தப்புரத்துல நுழைச்சிப் பார்க்கிறாங்க... பாதி வதந்திக்குக் காரணம் இதுதான். அவங்க மனசுல கெட்ட எண்ணம்தான் இருக்குன்னு அடிச்சுச் சொல்ல முடியாது. முக்கால்வாசி இந்த மாதிரி ஒரு நேரப் போக்கிற்காகத்தான் இருக்கும். கால்வாசிதான் ஆர்வமும் கெட்ட எண்ணமும் இருக்கும்.''

''என்னால ஒத்துக்க முடியலே. பாதிக்கப் படறது அவங்க இல்லே. நாம ரெண்டு பேரும்தான்.''

''இப்ப என்ன சொல்லிட்டாங்கன்னு இப்படிப் பதர்றே? எனக்கு உன்னைத் தெரியும். உனக்கு என்னைத் தெரியும். பின்னே என்ன?''

ஜானு ஒப்புக்கொள்ளாத மாதிரி மௌனமாய் ஜன்னல்பக்கம் திரும்பிக்கொண்டாள்.

''இதோ பார் ஜானு... இதுதான் உலகம் — நமக்குக் கீழே ஆணி வைக்கும். ஆனா... நாம கவலைப்படக் கூடாது. அப்பத்தான் நிம்மதியா வாழ முடியும். நாம பாட்டுக்கு நம்ம பாதைல அசராம போகணும்...''

''......''

''இது நம்ம ரெண்டு பேர் சம்பந்தப் பட்ட விஷயம்தான். நாம நண்பர்களா காதலர்களாங்கிறது நம்மளைப் பொறுத்த விஷயம்தான். அதைஏன் மத்தவங்க பேசறாங்கன்னு... அதுதான் உலகம். இதுக்கெல்லாம் அரண்டு போயிட்டா வாழ முடியாது ஜானு. சத்தியமாய் வாழ முடியாது.

''புரியுது மித்ரா... நான் கிளம்பட்டா...?''

''இரு. டீ குடிச்சிட்டுப் போகலாம்.''

குடித்துவிட்டுக் கிளம்பிய போது மித்ரன் சிரித்தான்.

''நாளைக்கு ஈவினிங் எப்பவும் போல வருவே, இல்லே ஜானு?''

''உம்...''

''எப்பவும் போல நானும், உனக்குப் பிடிச்ச இஷ்டமான டீயுடன் காத்திருப்பேன். மறந்திடாதே!...

செருப்பை மாட்டிக் கொண்டு புறப் பட்ட போது மித்ரன் வரைந்த படம் கண்ணில் பட்டது. அந்த மனிதனும் ஆணியும் பரிச்சயமாய்த் தோன்றிற்று.

அவன் அறையை விட்டுக் கிளம்பி மாடிப் படியில் இறங்கிய போது, கீழே இருந்த அறை ஜன்னல்கள் வழியே எட்டிப் பார்த்தன முகங்கள்.

அவற்றை அலட்சியப்படுத்தி விட்டு வேகமாய் நடக்க ஆரம்பித்தாள். இப்போது அந்த 'Just Be' —யின் அர்த்தம் நன்றாகப் புரிந்தது.

# ஆகவே, செக்ஷன் 302படி...

## 18

பட்டுக்கோட்டை பிரபாகர்

கீழுதட்டைப் பற்களால் கடித்துக் கொண்டு, பேண்ட் பாக்கெட்டுகளில் கைகளை நுழைத்துக் கொண்டு நிவிதாவைப் பார்த்தான் ஷியாம்.

"எனக்குத் தெரியும். என் இஷ்டப்படி நடந்துக்கிறதைத் தவிர உனக்கு வேறே வழி இல்லை. இதுதான் புத்திசாலித்தனம் கூட."

"இல்லைடா... இதுக்குப் பேர் வேசித் தனம்."

அக்னிச் சிதறலாய் நிவிதாவிடமிருந்து வந்த வார்த்தைகள் அவனைத் திடுக்கிட வைத்தன. 'டா' வா?

"என்ன சொன்னே? 'டா' வா?"

"பின்னே? உனக்கு என்னடா மரியாதை வேண்டியிருக்கு? உன் இஷ்டத்துக்குச் சம்மதிக்கிறதுக்கு நான் ஒண்ணும் நீ வாடகைக்கு எடுத்த விலைமகள் இல்லை. வந்ததும் போய்ட்டு வர்றேன்னு சொல்லிட்டுப் போகத்தான் காத்திருந்தேன். வர்றேன்."

நிவிதா புறப்பட்டாள்.

"ஏய், நில்லு. சிக்கலோட தீவிரமே உனக்குப் புரியலையா? நீ எவ்வளவு பெரிய ஆபத்திலே மாட்டிக்கிட்டிருக்கேன்னு நினைச்சுப் பார்த்தியா?"

"என் மனசாட்சிப்படி நான் எந்தத் தப்பும் செய்யலை."

"கோர்ட்ல உன் மனசாட்சியைக் கேள்வி கேட்க மாட்டாங்க. சாட்சியைத்தான் கேப்பாங்க. நான் ரொம்ப சீரியஸான ஆசாமி. எதையும் விளையாட்டுக்காகச் சொல்றவன் இல்லை. நிச்சயமா போலீஸ் வரும். உன்னைக் கைது செய்யும். அப்படி, இப்படி நீ நகர முடியாமல் அழுத்தமான ஆதாரங்களோட நீ சிக்கியிருக்கே."

"இதெல்லாம் உண்மை இல்லையே... நீ போலியா ஏற்படுத்தின தடயங்கள்தானே?"

"ஆமாம். ஆனா அது யாருக்குத் தெரியும்? சட்டப்படி நீ குற்றவாளியாத்தான் மதிக்கப்படுவே. ஜெயில் சர்வ நிச்சயம். வீம்பு பார்த்து உன் வாழ்க்கையையே கெடுத்துக்காதே."

நிவிதா திரும்பினாள். அவன் அருகில் வந்தாள்.

"மிஸ்டர் ஷியாம், என்னைப் பொறுத்த வரைக்கும் நான் இந்தக் கம்பெனிக்கு எந்தத் துரோகமும் செய்யலை. உண்மையா, நேர்மையா நடந்துக்கிட்டிருக்கேன். உனக்கு மனச்சாட்சி இருந்து, யோசிச்சுப் பார்த்து, ஓர் அப்பாவிப் பொண்ணு மேல் வக்ரத்தனமான ஆசைக்காக இப்படி அபாண்டமாப் பழி போடறோமேன்னு உணர்ந்தால் எனக்கு எந்தத் தொந்தரவும் தராதே. இப்படிக் கேவலமா நீ என்னைக் கேட்டதை நான் மறந்துடறேன். இல்லை, உன்னை மாட்டி வச்சித்தான் வேடிக்கை பார்ப்பேன்னு பிடிவாதமா நினைச்சியான்னா... தாராளமா காரியத்திலே இறங்கு. எனக்கு உண்மை மேலேயும், தர்மத்தின் மேலேயும் அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கு. அது என்னை எந்தப் பிரச்னையிலேர்ந்தும் காப்பாத்தும். நான் வர்றேன். எங்கேயும் ஓடிப் போகலை. அதுக்கு அவசியமும் இல்லை. நேரா என் ஹாஸ்டலுக்குத்தான் போறேன்."

பேசிவிட்டு விடுவிடுவென்று அவன் பதிலுக்குக் காத்திருக்காமல் நடந்தாள்.

ஷியாம், "நிவிதா, இதோ பாரு. நில்லு. நான் சொல்றதைக் கேளு. நான் இரக்கமெல்லாம் பட மாட்டேன். நில்லு" என்று சொல்லச் சொல்ல, அவள் திரும்பிப் பார்க்காமல் நடந்து அலுவலகத்தை விட்டு வெளியேறினாள்.

ஷியாமுக்குக் கோபம் ஜிவு ஜிவு என்று ஏறியது.

எத்தனை அலட்சியம்? இத்தனை இக்கட்டான சூழ்நிலையில் கொண்டு வந்து இவளை நிறுத்தியிருக்கிறேன். அப்படியும் திமிராகப் பேசி விட்டுப் போகிறாளே...

'டா' போட்டுப் பேசுகிறாள். ஒருமையில் பேசுகிறாள். அலட்சியமாகப் பேசுகிறாள். 'வேண்டுமென்றால் போலீசில் சொல்லிக் கொள்' என்று விட்டுப் போகிறாள்.

எந்த தைரியத்தில் இப்படிப் பேசினாள்? நான் அந்த அளவுக்குத் தீவிரமாகப் போக மாட்டேன் என்று நம்புகிறாளா? இது தைரியமா, இல்லை, மடத்தனமா?

வேறு வழியில்லாமல் என் நிபந்தனைக்கு உடன்படப் போகிறாள் என்று உற்சாகமாக வந்தால், இப்படி உதறி விட்டுப் போகிறாளே...

ஷியாம் சாதாரணமாகவே கோபக்காரன். 'ரா'வாகக் குடித்த விஸ்கி வேறு கறுகறுவென்று அவனை மேலும் உசுப்பி விட்டுக் கொண்டிருக்க...

உடனே தீர்மானித்தான்.

என்னை நீ அலட்சியப்படுத்திய வரை... நிச்சயம் தண்டனையடைந்துதான் ஆக வேண்டும். உன் திமிருக்கான பரிசு!

ஷியாம் உடன் புறப்பட்டான். அலுவலகத்தை விட்டு வெளியேறித் தன் காரை எடுத்துக் கொண்டு அருகில் உள்ள போலீஸ் ஸ்டேஷனை நோக்கி விரைவாகச் செலுத்தினான்.

மனம் உஷ்ணமாய் ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தது.

நிவிதா, என்னையா 'டா' என்றாய்? அனுபவிக்கப் போகிறாய் பார். ஊர் முழுக்க உன் மானத்தைச் சந்தி சிரிக்க வைக்கிறேன். பத்திரிகைகளில் உன் மோசடியைப் புகைப்படத்துடன் வெளியிட ஏற்பாடு செய்கிறேன்.

ஸ்டேஷன் வாசலில் நிறுத்திவிட்டு இறங்கி, உள்ளே வந்து, "இன்ஸ்பெக்டர் ராமநாதன் இருக்காரா?" என்றான்.

"அதோ" என்று ஓர் உள்ளறையைச் சுட்டிக் காட்ட, அங்கு வந்து யாரோ ஒரு நபரிடம் ஸ்டேட்மெண்ட் வாங்கிக் கொண்டிருந்தவரிடம், "குட் ஈவினிங் சார்" என்றான்.

"குட் ஈவினிங்," என்று அனிச்சையாய்ச் சொல்லிவிட்டு நிமிர்ந்து, "அடடே! நீங்களா? வாங்க சார். ஒரு நிமிஷம். இதை முடிச்சிடறேன்" என்று அந்த நபரிடம், "கையெழுத்துப் போடுவியா, கை நாட்டாய்யா?" என்றார்.

அவன் பின்னந்தலையைச் சொறிந்து கொண்டு, "அப்பாரு படிக்க வெச்சிருந்தா ஏங்க இந்தத் தொழிலுக்கு வர்றேன்" என்றான்.

"சரி, சரி, கையைக் கொண்டா" என்று ரேகை முத்திரை பதித்துக் கொண்டு, "போ. நான் கூப்புடறப்போ வரணும்" என்று அவனை அனுப்பின இன்ஸ்பெக்டர் ராமநாதன் நாற்பது வயதுகளில் இருந்தார். முகத்தில் அம்மைத் தழும்புகள். மீசை மூக்குக்குள்ளிருந்து ஆரம்பம் ஆகியிருந்தது.

"என்ன சார், சொல்லுங்க!" என்றார் ஷியாம் பக்கம் திரும்பி.

"என் ஆபீஸ்ல ஒரு பெரிய பிரச்னை நடந்து போச்சு. ஒரு டிஸ்ட்ரிப்யூட்டர் மேல மோசடி வழக்கு நடந்துக்கிட்டிருக்கு. இன்னும் விசாரணைக்கு வரலை. வழக்கில புரட்யூஸ் பண்ண வேண்டிய மோசடி சம்






"எல்லாத்தையும் ஆட்டிப்படைக்கிற ஒரு சக்தி இருக்குங்கிறதை நம்பறீங்களா?"

"நம்பறதாவது; அதுங்கூடக் குடும்பமே நடத்திக்கிட்டிருக்கேனே!"

—கீழை. அ. கதிர்வேல்.

பந்தப்பட்ட முக்கியமான டாக்குமெண்ட்சை என் ரூமிலே என் மேஜை டிராயர்ல வச்சிருந்தேன். இன்னைக்கு ஆபீஸ் முடிஞ்சி வீட்டுக்குப் போனதும் டிராயரைப் பூட்டினேனா இல்லையான்னு சந்தேகம் வந்துடிச்சி. வந்து பார்த்தால் டிராயரைப் பூட்ட மறந்திருக்கேன். உள்ளே டாக்குமெண்ட்சைக் காணலே."

"ஐ... சீ... உங்க ஆபீஸ்லேயே யாரோ எடுத்துட்டாங்களா?"

"மிச்சத்தையும் கேளுங்க. இந்த டாக்குமெண்ட்ஸ் திருட்டுப் போகலாம்னு நான் ஓரளவு எதிர்பார்த்தேன்."

"எப்படி?" என்று தம் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார் ராமநாதன்.

"அந்த டிஸ்ட்ரிப்யூட்டர் ஹரின்னு ஒரு ஆசாமி மூலமா எங்க கம்பெனி ஸ்டாஃப் ஒருத்தியை வளைச்சிப் போட முயற்சி செஞ்சது எனக்குத் தெரிய வந்திச்சி. திருச்சிலேர்ந்து இங்கே மாற்றலாகிப் புதுசா நிவிதான்னு ஒருத்தி வந்திருக்கா. அவளை அந்த ஹரி பேரம் பேசி மடக்கினது தெரிய வந்திச்சி. அவ அக்கவுண்ட்ஸ் செக்ஷன்ல வேலை பார்க்கிறா. நானும், அந்த செக்ஷன் ஹெட் அந்தோணியும் அவளைக் கண்காணிக்க ஆரம்பிச்சோம். ஹோட்டல் இம்பீரியல்ல நேரம் குறிப்பிட்டு மீட் பண்ணச் சொல்லி அந்த ஹரி கிட்டேர்ந்து நிவிதாவுக்கு ஒரு லெட்டர் வந்திச்சி. அதை அவளுக்கே தெரியாமப் பார்த்து ஜெராக்ஸ் காப்பி எடுத்து வச்சோம். ரெக்கார்ட்ஸ் ரூமிலே இருந்த டாக்குமெண்ட்சை என் ரூமுக்கு மாத்தினேன். நிவிதாவைக் கூப்பிட்டு விசாரிச்சோம். மறுத்தா. கண்டிச்சோம். அதுக்கப்புறமும் கண்காணிச்சோம். இன்னைக்கு ரெஜிஸ்தர் தபால்ல அவளுக்கு ஹரி கிட்டேர்ந்து ஒரு தபால் வந்திச்சி. அதை அவளோட ஹேண்ட் பேக்ல வச்சிருந்தா. லன்ச் இன்டெர்வெல்ல யாருக்கும் தெரியாம எடுத்துப் பார்த்தேன். நிவிதா பேருக்கு இருபத்தையாயிரத்துக்குக் கிராஸ் செய்யாம டிராஃப்ட் அனுப்பியிருக்கான் ஹரி. இன்னும் கேர்ஃபுல்லா இருக்கணும்னு தீர்மானிச்சேன். அப்படியும் கோட்டை விட்டுட்டேன். அவதான் எடுத்திருக்கணும். இப்போ நான் டாக்குமெண்ட்ஸ் தொலைஞ்சதைக் கண்டுபிடிச்சப்போ ஆபீஸ்ல அவ மட்டும் உட்கார்ந்து ஓவர் டைம் பார்த்துக்கிட்டிருந்தா. நான் நேரா போய் உன் ஹேண்ட் பேகை எடு. செக் பண்ணணும்னு கேட்டேன். மறுத்தா. கடுமையாக் கேட்டு வாங்கித் திறந்து பார்த்தா... உள்ளே அந்த டாக்குமெண்ட்ஸ் இருக்கு. நான் உங்களுக்கு போன் பண்ணத் திரும்புறதுக்குள்ளே எனக்கு டிமிக்கிக் கொடுத்துப்பிட்டு வேகமாப் போயிட்டா. நான் கைப்பையை அப்படியே அவ மேஜைக்குள்ளே வச்சிப் பூட்டிச் சாவியை எடுத்துக்கிட்டு நேரா இங்கே வந்துட்டேன். இந்தாங்க சாவி. அவளை விடக் கூடாது சார். நடவடிக்கை எடுத்தே ஆகணும். அப்பதான் ஆபீஸ்ல நாளைக்கு வேறே யாரும் தப்பு செய்ய மாட்டாங்க.

"கரெக்டுதான். நீங்க பார்த்தப்போ அந்த டிராஃப்டும் இருந்திச்சா?"

"இருந்திச்சி.

"நீங்கதான் எங்களை மாதிரியே துப்பறியற வேலை எல்லாம் செஞ்சி வச்சிருக்கீங்களே... போதும்... இந்த ஆதாரங்களை வச்சே உள்ளே தள்ளிடலாம். அவளையும் வச்சிக்கிட்டு ரெண்டு சாட்சிகளோட அந்த டாக்குமெண்ட்சை ரெக்கவர் செய்யணும். லேடி சப்—இன்ஸ்பெக்டரைக் கூட்டிக்கலாம். அந்தப் பொண்ணு எங்கே தங்கியிருக்கா தெரியுமா?"

"சைதாப்பேட்டை மேம்பாலம் கிட்டே ஒரு லேடீஸ் ஹாஸ்டல்ல தங்கியிருக்கா. அங்கேதான் போயிருக்கணும். ரொம்ப அழுத்தமான பொண்ணு. சாமர்த்தியமாப் பேசற பொண்ணு."

"வாங்க, எவ்வளவு தூரம் சாமர்த்தியம்னு பார்த்துடலாம்!" என்று எழுந்த இன்ஸ்பெக்டர் ராமநாதன், "கொஞ்சம் இருங்க" என்று சென்று கௌசல்யா என்கிற பெண் சப் — இன்ஸ்பெக்டருடன் வந்தார், "ஜீப் வேணாம். லேடீஸ் ஹாஸ்டல்னு சொல்றீங்க. பரபரப்பாயிடும். யாராச்சும் 'பெண்கள் விடுதியில் போலீஸ் ரெய்ட்'னு எழுதிடுவான். நீங்க கார்லதானே வந்தீங்க?"

"ஆமாம் சார். அதிலேயே போயிடலாம் சார்.

வழியாம் காரை ஓட்ட, ராமநாதன், "கேஸ் என்னன்னா...?" என்று சப்—இன்ஸ்பெக்டர் கௌசல்யாவுக்கு விளக்க ஆரம்பித்தார்.

அலுவலகத்தை விட்டு வெளியேறிய நிவிதா வேகமாக நடந்து மவுண்ட் ரோடு போஸ்ட் ஆபீஸ் வந்தாள். எஸ். டி. டி. கவுண்டரில் ஃபாரம் வாங்கிக் கோயமுத்தூர் என்று எழுதி, ஓர் எண்ணையும் எழுதிக் கையெழுத்திட்டுப் பணம் டெபாசிட் செய்து விட்டுப் பரபரப்பாகக் காத்திருந்தாள்.

பத்து நிமிடம் கழித்து அவள் அழைக்கப்பட்டதும், பூத்துக்குள் சென்று, "ஹலோ, ஹோட்டல் மூன்லைட்டா? அங்கே வினோத் குமார்னு மெடிக்கல் ரெப் இன்னைக்கு வந்து ரூம் போட்டாரா?" என்று கேட்டாள்.

"ஆமாம். இப்பத்தான் கால் மணி நேரமாச்சி. ரூம்லதான் இருக்கார். பேசணுமா? கனெக்ஷன் தரட்டுமா?"

"தேங்க் காட்! ப்ளீஸ்..." என்றாள்.

# அதிக சக்தி, அதிக போஷாக்கு,

## அதிக சாக்கலேட் சுவை...



அருந்துங்கள்

# கேம்ப்கோ வின்னர்

இது ஒரு சுவை மிகுந்த மாறுபட்ட சாக்கலேட் பானம். அதிக சக்தியை அளிப்பதற்காக குளுக்கோஸ் நிறைந்தது. போஷாக்கினை அளித்திட வைட்டமின்கள் மற்றும் தாதுச் சத்துக்களைக் கொண்டது.

மேலும் குழந்தைகள் மிகவும் விரும்பிடும், இதுவரைக் கிடைத்திராத அதிக சாக்கலேட் சுவை.

அருந்திப் பாருங்கள். இதைவிடச் சிறந்ததொரு சுவை மற்றும் சக்திமிக்க சாக்கலேட் பானம் இல்லை என்பதைக் கண்டுகொள்வீர்கள்.

**இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன ஆலை அளிப்பது.**




கேம்ப்கோ லிமிடெட்
மங்களூர்.

R K SWAMY/CL/5828

ஊ!

ஆ!

ஔச்!

# "ஊ" "ஆ" "ஔச்" இவ் வேதனைக் குரல்கள் வேண்டாமே!

சுளுக்கு, தசை பிடிப்பு. மூட்டு நோவு ஆகியன போலவே, பொதுவான உடல், முதுகு வலிகளும் துன்பந்தரும். அதற்குக் கவனம் தேவை.

எனவே, கைவசம் அயொடெக்ஸ் இருப்பது நல்லது.

அயொடெக்ஸ் வலியாற்றுவதோடு, திசுக்களின் பாதிப்பைக் குணப்படுத்துகிறது.

இருமுறை அயொடெக்ஸ் தினம் தடவ,
இரு மடங்கு குணம் கிடைக்கும்.
''ஊ'' ''ஆ'' ''ஔச்'' என்ற வேதனைக்
குரல்களை விரட்டி, மீண்டும் செயல்பட,
அயொடெக்ஸ் தேவை.




போடுவீர்
**அயொடெக்ஸ்®**
புறப்படுவீர் ஓடியாட.

HTA 1711

SKF— ஓர் எஸ்கேஎஃப் தயாரிப்பு

சில விநாடிகளில், "ஹலோ, வினோத் குமார்'' என்றான்.

"வினோத், நான் நிவிதா பேசறேன்.''

"ஆச்சரியம்!''

"இல்லை. அவசரம். நான் ஒரு பெரிய கிரைசிஸ்ல மாட்டியிருக்கேன். ஏன் எதுக்குன்னு கேட்காதீங்க. விவரமா நேர்ல சொல்றேன். உங்களோட செல்லப் பேரு ஹரி.''

"என்ன உளர்றே?''

"அவசரப் படாமக் கேளுங்க. நான் உங்களை ஹரின்னுதான் கூப்பிடுவேன். யார் எப்ப விசாரிச்சாலும் உங்களுக்கு ஹரின்னு ஒரு செல்லப் பேர் இருக்கிறதாச் சொல்லணும். தவிர ஹரிங்கற பேர்ல என் ஆபீசுக்கு லெட்டர் எழுதுவீங்க நீங்க. நேத்து என் பேருக்கு அடையாறு பிராஞ்ச்ல பேங்க் ஆஃப் இந்தியாவில் இருபத்தி ஐயாயிரம் எடுத்து ரெஜிஸ்தர் தபால்ல அனுப்பினீங்க. ஒரு சன்பென்சுக்காக அப்படிச் செஞ்சீங்க. எதுக்கு பணம்? நம்ம கல்யாணம் நிச்சயமானதுக்காக அந்தத் தொகைக்கு எனக்குப் பிடிச்ச டிசைன்ல ஒரு தங்கச் சங்கிலி வாங்கிக்க. புரிஞ்சுதா?''

"மெட்ராஸ்ல வெயில் அதிகம்னு புரியுது.''

"வினோத், விளையாடலை நான். ஐ யாம் இன் ட்ரபிள். போலீஸ் என்னைத் துரத்தப் போகுது. அதை நான் சமாளிச்சாகணும். எங்க மானேஜர் கெட்ட நோக்கத்தோட என்னைச் சாமர்த்தியமா ஒரு பெரிய சிக்கல்ல இழுத்துவிட்டுட்டான். இப்ப நான் சொன்னபடி எல்லாம் போலீஸ் உங்களை விசாரிச்சாச் சொல்லணும். சொல்வீங்களா வினோத்?''

"என்ன நிவிதா, இவ்வளவு சீரியஸாப் பேசறே? தாராளமாச் சொல்றேன். என் டூரைக் கேன்ஸல் செஞ்சிட்டுப் புறப்பட்டு வரட்டுமா?''

"முடியும்னா... ப்ளீஸ், வாங்க... எனக்குத் தெம்பா இருக்கும்.''

"எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் புறப்பட்டு வர்றேன். நீ எதுக்கும் கவலைப்படாதே. தைரியமா இரு. உனக்கு எந்த வகையிலே உதவி வேணும்னாலும் என் அப்பாவைப் போய்ப் பாரு.''

"நான் தனியாவே சமாளிச்சுடுவேன் வினோத். நேர்ல எல்லாம் சொல்றேன்!''

நிவிதா பேசி வைத்துவிட்டு, பாக்கித் தொகையும், ரசீதும் பெற்றுக் கொண்டு பஸ் பிடித்துத் தனது ஹாஸ்டலுக்கு வந்த போது—

ஹாஸ்டலின் வாசலில் ஷியாமின் கார் நின்று கொண்டிருந்தது. உள்ளே வந்தாள். வார்டனின் அறையில் இன்ஸ்பெக்டரும், சப் – இன்ஸ்பெக்டரும், ஷியாமும் பேசிக் கொண்டிருக்க...

நிவிதா எவ்வளவுதான் தைரியமாக இருந்தாலும், லேசாக ஒரு பயம் முதுகுத் தண்டில் ஊர்ந்தது.

இவளைச் சுட்டிக் காட்டி, "அவதான்!'' என்றான், ஷியாம்.

(தொடரும்)



# அமரர் கல்கி

# நினைவுச் சிறுகதைப் போட்டி—1988



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 வீதம் | ரூ. | 750 |

ஆக மொத்தம் ரூ. 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

• கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

• அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லைஎன்றும்போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

• நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.**

• உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

• பிரசுரத்துக்குஏற்கப்படாதகதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

• கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

• எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

• சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

• போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

• எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.**




# மார்வல்-இதம் தரும் தன்மை காஞ்சிப்பட்டுப் போன்ற மென்மை.

ஸ்பன் ஸில்க் போன்ற தன்மை. காஞ்சீவரம் பட்டுப் போன்ற மென்மை. தேங்காய் எண்ணெயின் இயற்கையான நற்குணங்கள் தரும் நுரைவளத்தின் செழுமை.

மற்ற சோப்புகளை விட
3 மடங்கு அதிகம் தேங்காய் எண்ணெய் கொண்டது

Mudra:B·G·4417

# பற்களைப் பற்றிய ஒரு பெரிய உண்மை

வாய் துர்நாற்றம் என்பது பற்களைவிட அதிகம்,
ஈறுகள் சம்பந்தப்பட்டதாகும்.



# மற்றுமொரு பெரிய உண்மை

போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட்டில்
உள்ள ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜெண்ட் மட்டுமே ஈறுகளை
வலுவாக்கி அவற்றை ஆரோக்கியமாக வைக்கிறது.
அதனால் வாய் துர்நாற்றம் ஏற்பட வாய்ப்பே இல்லை.

நுரை வளமுள்ள
போர்ஹென்ஸ்
—நீல நிறப் பேக்கிலே.




கட்டுப்படுத்தப்பட்ட
நுரையுள்ள
—ஆரஞ்சு பேக்கிலே.




ஒரு பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்.

GM.27/88.Tm



"இவ்வளவு ஷீல்டும் உங்களுக்குக் கிடைக்க, நீங்க என்ன செய்தீங்க?"

"அடகுக் கடை வெச்சிருந்தேன்!"

— கீழை. அ. கதிர்வேல்.

மனைவி: குடும்பத்தோட வர்றவங்களுக்கு ஃபேமிலி ரூம்னு எதுக்காகத் தனியா சாப்பிட இடம் ஒதுக்கி வைக்கிறாங்க?

கணவன்: சாப்பிட என்னை ஆர்டர் செய்யறதுன்னு புருஷன், பெண்டாட்டி போட்டுக்கற சண்டையை நாலு பேர் பார்த்துச் சிரிக்காமல் இருக்கத்தான்!

— ரத்னம்.






அவன்: அவரை எப்படித் தேசியத் தலைவர்ங்கிறே?

இவன்: எல்லா மாநிலங்களிலும் பினாமிப் பெயரில் சொத்து வைச்சிருக்கார்!

— உ. ராஜாஜி.

டீ. வி. குவிஸ்!

நடுவர்: தேசிய கீதத்தை இயற்றியவர் யார்?

மாணவன்: ஷர்மிளா தாகூர்!

நடுவர்: தாகூர் எனக் கூறியதால் ஐந்து மதிப்பெண்கள்!

— ஏ. குமார்



"நம்ம புரமோஷன் விஷயம்... என்ன ஆச்சுங்க?''

— அந்த ஆரம்ப சுகாதார நிலையத்தின் ஜூனியர் அஸிஸ்டெண்ட் என்கின்ற இளநிலை உதவியாளர், அந்நிலையத்தின் மெடிக்கல் ஆபீஸர், என்னும் மருத்துவ அதிகாரியிடம் பணிவுடன் கேட்டார்.

'இந்த ஆரம்ப சுகாதார நிலையத்தில் கடந்த மூன்று மாதங்களாக, நிர்ணயிக்கப் பட்ட குடும்பநல அறுவைச் சிகிச்சைக் குறி யீட்டினை அடையச் சரியானபடி முயற்சி செய்யப்படவில்லை; எனவே தகுந்த முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும் என இந்த ஆரம்ப சுகாதார நிலையத்தின் மருத்துவ அதிகாரி அறிவுறுத்தப்படுகிறார்' — என்று அறிவுறுத்திய மாவட்டக் குடும்பநல அலுவல ரின் 'நோட்'டினைப் படித்துக் கொண்டிருந்த மருத்துவ அதிகாரிக்கு இக்கேள்வி எரிச்ச லூட்டியது.

''என்னய்யா கேட்கிறே?''

''நம்ம புரமோஷன்...'' என்று அந்த இளநிலை உதவியாளர் மறுபடியும் இழுக்க

# செய்யப்படுகிறது



— அவருக்குக் கோபம் வந்தது.

''நம்ம புரமோஷன்னு...? உன் புரமோஷனைக் கேட்கிறுயா? இல்லே... என் புரமோஷனைக் கேட்கிறுயா? அல்லது... உன் புரமோஷனையும் என் புரமோஷனையும் ஒண்ணு 'கிளப்' பண்ணிக் கேட்கிறுயா? சொல்லு...''

அப்பொழுதுதான் அவன் கேட்ட கேள்வியின் அர்த்தம் அவனுக்குப் புரிய — மௌனமாக நின்றுன்.

அவனுடைய மௌனம் அவருக்கு மேலும் எரிச்சலை அதிகரிக்கக் கோபத்தில் வெடித்தார்.

''என்னய்யா நம்ம புரமோஷன்... என்னையும் உன்னேட ஜோடி சேர்க்கிறுயா...? நானும் நீயும் ஒண்ணு உட்கார்ந்து 'ரம்மி' ஆடினேம்... அப்படித்தானே...? நம்ம புரமோஷன்.''

''இல்லே சார்... என் புரமோஷனைப் பத்தித்தான் கேட்டேன்...'' என்றபடி அவன் பயந்து, அவசர அவசரமாக அவருக்குத் தன்னிலை விளக்கமளித்தான்.

''நீ பார்க்கிற வேலைக்குப் புரமோஷன் வேறே வேணும் உனக்கு. ஒழுங்கா ஒரு டி. ஏ. பில் போடத் தெரியுதாய்யா உனக்கு? ஏழு தடவை திருப்பி அனுப்பருன் ட்ரசரியிலிருந்து... நீ போடற 'பே' பில்லே ஆடிட் போட்டுத் திருப்பி அனுப்பருன். உனக்குப் புரமோஷன்? போய்யா உன் பேப்பரை 'பார்வர்டு' பண்ணவே மாட்டேன்... போறப்படி. எப். ஓ. கிட்டேயும் சொல்லிட்டு வர்றேன் உன் லட்சணத்தைப் பற்றி...''

அவர் விரட்ட — இனி ஜென்மத்திற்கும் புரமோஷனைப் பற்றி நினைக்கக் கூடாது என்ற உறுதியில், இவன் நிற்க — டி. எப். ஓ. வின் தபால் அவருக்கு நினைவுக்கு வந்து, ஆத்திரம் அதிகரித்தது.

''கௌரிக்கு மெமோ குடுத்திட்டியா?''

''குடுத்தாச்சு சார்.''

''அவ 'பே' பில்லே நிறுத்தச் சொன்னேனல்ல!''

''அந்தப் பொண்ணு 'பே' பில்லே மட்டும் நிறுத்தி வைச்சிருக்கேன் சார்!''

''சரி... போய் வேலையைப் பார்.''

**கௌரி** — அந்த பிரைமரி ஹெல்த் சென்டரின் மெட்டர்னிட்டி அஸிஸ்டென்ட் என்கின்ற மகப்பேறு உதவியாளர். அன்று ஸ்டாப் நர்ஸ் 'லீவு' ஆதலால் புற நோயாளிகளுக்கு ஊசி போட்டுக் கொண்டிருந்தவள், ஜுனியர் அஸிஸ்டென்ட் வந்து நிற்பதைக் கண்டு, ''என்ன சார் விசேஷம்?'' என்றுள் சிரிப்புடன்.

''கௌரி... இந்த மாசமும் உன் 'பே' பில்லே நிறுத்தி வைக்கச் சொல்லிட்டார் மெடிக்கல் ஆபீஸர்...''

ஊசி போட்டுக் கொண்ட நோயாளியின் மருந்துச் சீட்டு விவரத்தைப் பதிவேட்டில் பதிந்து நிமிர்ந்தவள், ''என்ன சார் இது... மாசா மாசம் இப்படியே செஞ்சால் எப்படி?'' என்று கோபத்தில் கேட்டாள்.

''அந்த ஆள்கிட்ட யார் பேசறது? நீயே போய் இதைப் பத்திக் கேளும்மா...''

ஜுனியர் அஸிஸ்டென்ட் இதைக் கூறியபடி நகர, நின்று கொண்டிருந்த ஒரு சில புற நோயாளிகளுக்கு, ஊசி போட்டு அனுப்பிவிட்டு, மெடிக்கல் ஆபீஸர் அறையை நோக்கி நடந்தாள்.

மருத்துவ அதிகாரிக்கு ஏற்கெனவே ஏறியிருந்த இரத்த அழுத்தம் இறங்காமல், இன்றும் அதிகமாகியது இவளைப் பார்த்தவுடன்.

''என்னம்மா 'மெமோ'வை வாங்கிக் கிட்டியா...? பதில் எப்பக் கொடுக்கப் போறே...?''

''வாங்கிக்கிட்டேன் சார்... சீக்கிரம் பதில் குடுத்திடறேன்...'' — சத்தமாகப் பேசினல் அழுது விடுவோமென்று மிக மெதுவாகப் பேசினுள்.

''இப்படியே மெமோ வாங்கிக்கிட்டிரு... வேலே பார்த்திடாதே... மேலேயிருந்து ஓலே மேலே ஓலே அனுப்பிக்கிட்டிருக்கான்... என் மேலே ஆக்ஷன் எடுப்பேன்ங்கிறுன்... உனக்கென்ன...?'' — என்று சிடுசிடுத்தபடியே மேஜை மீது எதையோ தேட ஆரம்பித்தார்.

''சார்...'' என்று இவள் தயங்கியபடி அழைக்க, நிமிர்ந்து அவளைப் பார்த்தார்.

''இந்த மாதமும் என் 'பே' பில்லே மட்டும் நிறுத்தி வைக்கச் சொல்லியிருக்கீங்க... அம்மா இறந்த செலவுக்கெல்லாம் நிறையக் கடன் வாங்கியிருக்கேன். அக்காவும் அவ குழந்தைகளும் ஊரிலிருந்து வந்திருக்காங்க. தம்பி ஹாஸ்டல்ல தங்கிப் படிச்சுக்கிட்டிருக்கான்..., நிறையச் செலவிருக்கு சார்...''

''இந்தாம்மா... இந்த மாதிரியெல்லாம் வந்து புலம்பிக்கிட்டு நிற்காதே... எந்த மாதமாவது கரெக்டா உன் கணக்கைக் குடுத்திருக்கியா? போன மாதம் நாலுக்கு மூணு பாக்கி; இந்த மாதம் இன்னைக்குத் தேதி இருபத்தொன்பது ஆச்சு... இன்னும் ஒரு கேஸ் கூடப் போடலே நீ... என்ன வேலே பார்க்கிறே?''

''அம்மா இறந்துட்டாங்க சார்...பதினேந்து நாள் லீவுல போயிட்டேன்!''

''இந்த மாதம் சரி... போன மாதம்...?''

''மார்கழி மாதம் சூனிய மாதம்னு ஒருத்தரும் ஆபரேஷனுக்கு வரமாட்டேன்னுட்டாங்க சார்... அதனலே...''

''என்னம்மா அதனலே...? மார்கழி மாதம் சூனிய மாதம்... அம்மா இறந்துட்டாங்க... இதெல்லாம் 'ரீசனே' இல்லே. புரிஞ்சுதா? இப்படியெல்லாம் மேல ரிப்போர்ட் அனுப்ப முடியாது. டி. எப். ஓ. நம்ம டிஸ்ட்ரிக்ட்லதான் அதிகமான 'டார்கெட்'டைக் காட்டணும்னு வெரட்றுர்... கலெக்டர் 'பிரைஸ்' வாங்கணும்னு பேசிக்கிட்டிருக்கார். அதனல் இப்படியெல்லாம் பதில் சொல்லிக்கிட்டிருக்க முடியாது...''

---

பாரிஜாதம்



## அருள்வாக்கு

மனுஷ்யர்களில் எவராவது ஆனந்தத்தைத் தேடாமல் துக்கத்தைத் தேடிப் போகிறவர் உண்டா? ஆனாலும் அந்த ஆனந்தம் உள்ளே இருப்பதை அறிந்து சாந்தத்தில் அதை அனுபவிக்காமல், வெளியிலே ஆனந்தத்தைத் தேடித் துரத்திக் கொண்டே போய்ச் சாந்தியை ஓயாமல் கெடுத்துக் கொள்கிறார்கள். தன் நிஜஸ்வரூபம் என்ன என்று ஒருவன் அம்பாளின் கிருபையால் பிரார்த்தித்து ஆத்ம விசாரம் தியானம் செய்து பார்த்தால், தானே பூரண ஆனந்த வஸ்து என்று தெரிந்து கொள்வான்.

இவனுடைய இயல்பான உள் ஆனந்தம் மகாசமுத்திரம் மாதிரி இருக்கிறதென்றால், இவன் இப்போது புறத்தில் தேடி ஓடுகிற வஸ்துக்களிலிருந்து கிடைக்கிற ஆனந்தமெல்லாம் ஒரு திவலை மாதிரிதான். இதை ஒருத்தன் உணர்ந்து விட்டால் அப்புறம் வெளி இன்பத்தைத் தேடவே மாட்டான். தன்னைத் தானே அனுபவித்துக் கொண்டு ஆனந்த சமுத்திரமாக இருப்பான். சமுத்திரம் இருக்கிற இடத்திலேயே கரையை விட்டு வராமல் இருந்தாலும் அதனிடம் நதிகள் போய் விழுகின்றன அல்லவா? அப்படியே ஆசைகள் இவனிடம் வந்து விழுந்து சமுத்திரத்தில் நதிகள் விழுந்து மறைவதுபோல் மறைந்தே போய்விடும். 'ஆபூர்ய மாணம் அசலப்ரதிஷ்டம் சமுத்ரம்' என்று கீதை சொன்னமாதிரிபேரின்பக்கடலாகநிறைந்து, அசைவதற்கு இடமே இல்லாத அளவுக்கு எங்கும் நிறைந்து அசையாமல் பரம சாந்தமாக நிற்பான். தேவேந்திர பதவியின் ஆனந்தம்கூட இந்த ஆத்மானந்தக் கடலின் ஒரு துளிதான் என்கிறார் ஸ்ரீ பகவத் பாதர்கள்.

பதவி, பணம், ஸ்த்ரீ, புருஷாள், கௌரவம், பப்ளிஸிடி — என்றிப்படி வெளியிலிருந்து நமக்கு ஆனந்தம் கிடைப்பதாக எண்ணிக் கொண்டு ஓயாமல் யத்தனம் செய்வது அத்தனையும் சமுத்திரமாக இருக்கிற நாம் அதையறியாமல் ஒரு சொட்டு ஜலத்துக் காகத் தவிக்கிற மாதிரிதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

''கேஸே கெடைக்க மாட்டேங்குது சார்.''

''கேஸ் கிடைக்கலேன்னு நான் டி. எப். ஒ. கிட்டே சொல்ல முடியுமா? மற்ற சென்டர் மட்டும் எப்படி 'அச்சீவ்' பண்ணிக் காட்டறுங்கன்னு கேட்க மாட்டாங்களா? அதெல்லாம் எனக்குத் தெரியாது.. கொடுத்திருக்கிற குறியீட்டை அச்சீவ் பண்ணிக் காட்டணும். ரெண்டுமெமோ வாங்கிட்டே... மூன்ருவது வாங்கினுல் தெரியுமில்லே? சம்பளத்தைக் 'கட்' பண்ண எழுதுவேன். அடுத்து சஸ்பென்ஷன்தான்... சரி போ...'' — அவர் கோபத்தில் சத்தம் போட — புறநோயாளிகள் சில பேர் உள்ளே எட்டிப் பார்த்தனர்.

''சார் 'பே' பில்...'' — மறுபடியும் சம்பளத்தைப் பற்றிக் கேட்க —

''உன் மேலே நான் பரிதாபப்படறதுக்கு, மேலே இருக்கிறவன் என் மேலே பரிதாபப் படணுமே... சொல்லும்மா... இன்னைக்குத் திங்கட் கிழமை. வெள்ளிக்கிழமைக்குள்ளே ரெண்டு கேஸாவது போட்டு 'சர்டிபிகேட்' புரட்யூஸ் பண்ணு. அப்புறம் பார்க்கலாம், 'பே' பில்லைப் பத்தி!''

அவள் அறையை விட்டு வெளியே வந்தாள். விழிகளில் நீர் முட்டி நின்றது. என்ன உத்தியோகம் இது? ஒவ்வொரு மாதமும் இந்தக் கூத்துதான். வெள்ளிக்கிழமைக்குள் எங்கேயென்று பிடிப்பது இரண்டு கேஸ்கள்?

ஹாஸ்டலில் படிக்கும் ஒரே தம்பியும், வந்திருக்கும் அக்காவும், அவளது குழந்தைகளும், நினைவிற்கு வந்தனர். அக்காவை ஊருக்கு அனுப்பி வைக்க வேண்டும். குழந்தைகளுக்குத் துணிகள் எடுத்துக் கொடுக்க வேண்டும். பணம் — எங்கு, யாரிடம் கேட்பது?

எதிரில் ஹெல்த் விசிட்டர் — சுகாதார மேற்பார்வையாளர் அன்புமணி வந்தார். கையில் எப்பொழுதும் வைத்திருக்கும் டைரி. மருத்துவ அதிகாரியைப் பார்க்க வந்தவர், இவளைப் பார்த்தவுடன் நின்றார்.

''என்னம்மா... அழுதுக்கிட்டு வர்றே? மெடிக்கல் ஆபீஸர் திட்டினாரா?''

''மெமோ வாங்கியிருக்கேன் சார்... கேசு ஒண்ணும் கெடைக்க மாட்டேங்குது... நீங்களாவது ஹெல்ப் பண்ணுங்களேன்...''

''ஐயோ என்னுலெ முடியாதும்மா. பிறந்தது நாலும் பொண்ணு... இன்னும் ஆண் வாரிசு வேணும்ன்னுட்டு இருக்கா என் பெண்டாட்டி.''

''நீங்க வேறே... உங்களுக்கு எப்போதும் இந்தக் கேலியும் கிண்டலும்தான்... ஏதாவது கேசு புடிச்சுக் குடுங்கன்னு கேட்டா...?''

உத்திரவாதமுள்ள

அசல் தங்க, வெள்ளி ஜரிகையுடன்
கலையழகு மிகுந்த காஞ்சீபுரம்
பட்டு சேலைகள், பாவாடைகள்
வாங்க சிறந்த ஸ்தாபனம்.



# மீனாட்சி அம்மன் பட்டு விற்பனை நிலையம்

23, இரண்டாவது அக்ரஹாரம்
சேலம்-636 001

"மா மவ மீனாட்சி"

 64667, 66506.

# தடையற்ற தண்ணீர் கிடைக்க




A Product of
**DLF UNIVERSAL LIMITED**
American Universal Division
6, அவின்யூ ரோடு
நுங்கம்பாக்கம்,
சென்னை -34
போன் : 477942

# கிளாசிக் டைமிங்




## ஆட்டோ-ஆன்-ஆப் டைமருடன்

ஆட்டோ-ஆன்-ஆப் டைமர்
தனி மேன்மையுடையது

கிளாசிக் இதற்குமுன்பிராத
17 அம்சங்களைக் கொண்டது.

**CROWN-TV**

வேறு எந்த டிவி-ஐயும் விட அதிக இல்லங்களில் காணப்படும் ஒரே டிவி
உங்களுக்கு அருகாமையிலுள்ள கிரவுன் டி.வி. டீலர்களை அணுகவும்.

BRIGHT/CTV

''போன மாசம் புடிச்சுக் கொடுத்தேனில்ல...?''

''அந்த ஆளா...? அது பெரிய கதை. ஆபரேஷனுக்கு முன்னாடியே எதுக்கோ ஐம்பது வேணும்னு கேட்டான். குடுத்தேன். வாங்கிக்கிட்டுப் போனவன் தான்...... தண்ணியைப் போட்டு, ஜி. எச். வராந்தாவில் படுத்தவன், மறுநாள் தான் எந்திரிச்சான். கடைசியில ஆபரேஷனுக்குக் கூட்டிக்கிட்டுப் போனால்... ஏற்கெனவே செஞ்ச கேஸாம்... டாக்டர் என்னை வெரட்டுறார். கையிலிருந்து ஐம்பது ரூபாய் போனதுதான் மிச்சம். ஆனால் அதே கேசை, போன வாரம் மெட்டர்னிட்டி அஸிஸ்டென்ட் மரகதம் கூட்டிக்கிட்டுப் போய், 'கேசு' போட்டிருக்காங்க... என்னத்தைச் சொல்ல?''

''உனக்குத் திறமை பத்தாது கௌரி. கிழடு கட்டை, ஆபரேஷன் செஞ்சது, செய்யாததுன்னு கூட்டிக்கிட்டு வந்து போட்டுட்டுப் போவியா...? மெமோ வாங்கிக்கிட்டு நிற்கிறே. நான் இப்படித்தான் செஞ்சேன்.... சாமியார் மாதிரி ஒருத்தன் — அவனுக்கு ரெண்டு ரூபாய்க்குக் 'கஞ்சா' வாங்கிக் குடுத்தேன். பின்னாலேயே வந்துட்டான். கேசு போட்டேன். அப்புறம் ஒரு பிச்சைக்காரன் — என்ன பண்றது? குறியீடு, குறியீடுன்னு இப்படித்தான் செய்ய முடியும். ஆட்களை எங்கேயிருந்து புடிச்சுக்கிட்டு வர்றது? அப்புறம், சொல்ல மறந்துட்டேன்... கேன்வாசர் கனகத்தைப் பார்த்தேன். ஏதோ ரெண்டு கேசு இருக்கிறதாச் சொன்னாள். போய்ப் பாரேன்'' என்று கூறியபடி அவர் நகர ஆரம்பித்தார்.

இந்த மாதமும் சம்பளம் இல்லையென்றால் என்ன செய்வது? என்ற அச்சத்துடன் இவளும் நகர்ந்தாள்.

அசோசியேஷனில் சொல்லி இதைக் கேட்கச் சொல்லலாமா — என்ற நினைவு வந்தது.

வேண்டாம். இதையே சாக்காக வைத்து, மெமோவைக் காட்டி நடவடிக்கை எடுத்தால் — ரொம்பவும் மோசம். கனகத்தைப் பார்க்க வேண்டும். வெள்ளிக்கிழமைக்குள் எப்படியாவது இரண்டு கேஸ்கள் போட்டுச் சம்பளத்தைப் போடச் சொல்ல வேண்டும். நினைத்தபடியே மருத்துவமனையை விட்டு வெளியே வந்தாள்.

**எ**ங்கெல்லாமோ, கேசுக்காக அவள் அலைந்து விட்டு வீடு திரும்பும் பொழுது, குழந்தைகள் தூங்கிக் கொண்டிருக்க, அக்கா, முன் வராந்தா வெளிச்சத்தில் ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

இவளைப் பார்த்ததும் நாற்காலியிலிருந்து எழுந்து வந்த அக்கா, ''என்ன கௌரி... ஆஸ்பத்திரியிலிருந்து அப்படியே போயிட்டியா? காப்பி சாப்பிடக் கூட வீட்டுக்கு வரலே!'' என்று கேட்டாள்.

அவள் 'ஆமாம்' என்று மட்டும் தலையசைத்து, ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்து, இரண்டு கைகளாலும் தலையைத் தாங்கிக் கொண்டாள்.

''என்ன கௌரி... உடம்புக்கு முடியலையா? ஒரு மாதிரி இருக்கிறே...? எங்கே போயிருந்தே இந்நேரம் வரைக்கும்?''

''ஒண்ணுமில்லே. நல்லாத்தானிருக்கேன்.''

''சும்மா சொல்லு... என்ன முகமெல்லாம் கறுத்துக் கெடக்கு?''

சிறிது நேரம் ஒன்றுமே பேசாமலிருந்தவள், பின் மெதுவாக ஆரம்பித்தாள்.

''கேசு ஒண்ணும் கெடைக்கலேக்கா... மெமோ இன்னைக்கும் ஒண்ணு குடுத்திருக்காங்க... வெள்ளிக்கிழமைக்குள்ள ரெண்டு கேஸாவது போட்டால்தான் சம்பள 'பில்லே' அனுப்புவேன்னு மெடிக்கல் ஆபீஸர் சொல்றார். அதான் கேசு விஷயமா அவசரமா வெளியே போயிட்டேன்.''

''கெடைச்சுதா?''

''இல்லே.'' — இதைத் தன் அக்காவிடம் கூறிவிட்டு வெகுநேரம் யோசனையில் ஆழ்ந்தாள்.

அக்கா சாப்பிட அழைத்தபோது, எழுந்து வந்தாள்.

''குழந்தைகள் சாப்பிட்டாச்சா?''

''சாப்பிட்டாங்க. இந்நேரம் வரைக்கும் சித்தியைக் காணோம்... சித்தியைக் காணோம்னு, ரெண்டும் உன்னைத் தேடிக்கிட்டிருந்தது... இப்பத்தான் படுத்தது!''

குழந்தைகள் தூங்குவது ஓர் அழகுதான். இரண்டும் ஒருக்களித்துப் படுத்திருந்தன, பூக்கள் போன்று.

அக்கா பேசப் பேச, இவளுக்கு ஏதோ பொறி தட்டியவளாய் அவளைப் பார்த்தாள்.

''அக்கா, நீ ஆபரேஷன் செஞ்சுக்கறியா?''

சாதம் போட எடுத்த தட்டைத் தரையில் வைத்துவிட்டு, அக்கா மௌனமாக ஏறிட்டு நோக்கினாள் இவளை.

''என்ன கௌரி சொல்றே?''

''நீ ஆபரேஷன் செய்துக்கிறியான்னு கேட்டேன்!''

அவள் பலமான சிந்தனையில் ஆழ்ந்து போய்ப் பின் பேச ஆரம்பித்தாள்.

''அவர்தான் ஆபரேஷன் பண்ணிக்கிட்டாரே கௌரி... பாக்டரியில் அதுக்காக வட்டியில்லாம மாசா மாசம் சம்பளத்தில பிடிக்கிற மாதிரி ரெண்டாயிரம் ரூபாய்க் கடனும், அதுபோக ஊக்கத் தொகையும், ஒரு வார லீவும் சம்பளத்தோட குடுத்தாங்க... நானும் எதுக்கு?''

''அத்தான் பண்ணிக்கிட்டா என்ன! நீயும் செஞ்சுக்கோ... எனக்கும் ஒரு கேஸ் கெடைக்கும். வெள்ளிக்கிழமைக்குள்ள ரெண்டு போடணும் அக்கா...''

''அவர்கிட்ட கேட்க வேண்டாமா?''

''அத்தான்கிட்ட நான் சொல்லிக்கிறேன்...''

அக்கா மறுபடியும் யோசித்துப் பின் சரி என்பது போல் மௌனித்துச் சோறிட்டாள் தட்டில்.

# Novella 2000

(வாஷிங் மெஷின்)

## ஐரோப்பாவின் ITT உதிரி பாகங்களுடன், சிறந்த தொழில் நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டது.



வெளுக்கிறது !



அலசுகிறது !



உலர்த்தியும் தருகிறது !



ஒரு குழந்தையும் இயக்க சுலபமானது. எளிதாக இயங்கக்கூடியது.

மேலும் விபரங்கட்கும், இலவச செயல் விளக்கத்திற்கும் அணுகவும்

## கிளென்ஸ் மார்க்கெட்டிங்ஸ்

(விற்பனை மற்றும் சர்வீஸ்)

17, II தெரு, சேட் காலனி, எழும்பூர், சென்னை-600 008.

போன் : 860340

மதுரை — சேலம் — ஈரோடு — திருச்சி

பி. எஸ். ஏஜென்ஸீஸ்,

நெ. 1/272, பாரத் நகர், அஞ்சல் நிலையம் எதிரில், திருச்சிராப்பள்ளி—620 016.

Space Ad



# இருள் வரும் நேரம்

**5**

**சுஜாதா**

"இப்ப டிஸ்டர்ப் பண்ணாதீங்க. காயத்துக்கெல்லாம் மருந்து போட்டிருக்குது. அப்புறம் தூக்கத்துக்கு ட்ராங்க்விலைஸர் கொடுத்திருக்கேன். அழைச்சுட்டுப் போங்க. ராத்திரி ஏதும் கேக்காதீங்க. விசாரிப்பெல்லாம் அப்புறம் ஒரு வாரம் கழிச்சு வெச்சுக்கங்க. என்ன டிஎஸ்பி ஸார், பொம்பளைங்களை ரட்சிக்காம என்னங்க போலீஸ் நீங்க!"

"ஸெல்ட்டி டாக்டர்! நான் என்ன சொன்னாலும் இந்த வேளையிலே யாரும் சமாதானமாகப் போறதில்லை!"

"புவர் டாக்டர் ராம் பிரகாஷ்!"

ராம்பிரகாஷ், அவர்கள் சொல்வது ஏதும் காதில் விழாதவராகக் கைத்தாங்கலாக அம்ருவை அழைத்துச் சென்று போலீஸ் காரில் முன் சீட்டில் உட்கார்வதற்கு உதவி செய்து, அவளருகே நெருக்கமாக உட்கார்ந்தார். அவள் மறுபடி 'செருப்பு' என்றாள்.

"செருப்பை அப்புறம் தேடிக்கலாம், அம்ரு."

"பார்க்கிலே விழுந்துருச்சு" என்றாள்.

கோபியும் ராம்பிரகாஷும் பார்த்துக் கொள்ள, டிஎஸ்பி சோமசேகரே வண்டி ஓட்டினார். "வில் கெட் தெம் டாக்டர்."

"தெம் ஆ ரெண்டு மூணு பேரா?"

"ஆமாம், ஒரு ஆளால இந்தக் காரியம் நடத்த முடியாது!"

"ரெண்டு பேரு" என்றாள் அம்ரு.

"என்ன சொல்றே அம்ரு?" என்றார் திடுக்கிட்டு.

"இரண்டு பேர் இருந்தாங்க. ஒருத்தன் தான் இழுத்துட்டுப் போனான். செருப்பு அப்பதான் விழுந்திருக்கணும்."

காரில் மௌனம் நிலவியது. அம்ரு தன்னிச்சையாகத் தொடர்ந்து, "பஸ்ல நீங்க பாட்டுக்குப் போயிட்டீங்க. பேந்தா மாதிரி முழிச்சுக்கிட்டு நிக்கறேனா! சட்டுன்னு பக்கத்தில வந்து ஆட்டோ நிக்கறது. 'அம்மா ஏறுங்கம்மா. அவர் போயிட்டாரு, பஸ்ல. அடுத்த ஸ்டாப்பில புடிச்சுரலாம்.'"

"தமிழ் பேசினாங்களா?" என்றார் சோமசேகர்.

"தமிழ்தான். ரெண்டு பேரும் டிரைவர் சீட்ல உக்காந்துக்கிட்டு இருந்தது கொஞ்ச தூரம் போனப்புறம்தான் தெரிஞ்சுது."

"மிஸஸ் ராம்பிரகாஷ் எல்லாம் காலையில பார்த்துக்கலாம்! ஒர்ரி பண்ணிக்காதீங்க. நீங்க ரொம்ப டயர்டா இருக்கீங்க..."

"இப்பவே சொல்லிடறேன், மறந்துபோயிடும். ரெண்டு பேர் இருந்தாங்க. விதான் சௌதா தாண்டினதும் சட்டுன்னு ஆட்டோவைத் திருப்பினாங்க. என்னப்பா திமர்னு திருப்பறே? அப்புறம் எக்ஸ்ட்ரா சார்ஜ் கொடுக்க மாட்டேன்னு பைத்தியம் மாதிரி சொல்றேன். 'குறுக்கு வழியாப் போய்ப் பஸ்ஸைப் பிடிச்சுரலாம்'னு இருட்டிலிருந்து சொல்றான். சட்டையைக் கழற்றி ஓரத்தில மாட்டினான். அப்புறம் லைப்ரரி தெரிஞ்சது. இந்தப் பக்கம், செஞ்சுரி கிளப்பு இருக்குமே, அந்தப் பக்கம் இல்லை... இந்தப் பக்கம் சிமெண்டில பெஞ்சு போட்டிருக்குமே, அங்கே ப்ளாட்பாரத்தைத் தாண்டி எறங்கறான்... ஆட்டோ தத்தித் தத்திப் போறது!"

அம்ரு நிறுத்த, டாக்டர் ராம்பிரகாஷ் பதற்றப்பட்டு,

"அம்ரு, சொல்ல வேண்டாம். இப்ப வேண்டாம்!" என்றார்.

"மறந்து போயிடும், மறந்து போயிடும்!" என்றாள். அவர் கையை இறுக்கமாகப் பிடித்தாள். விரல்கள் சில்லென்றிருந்தன. பறவைக் குஞ்சின் இதயம் போல, அவள் கை துடித்தது.

"சொல்லிடறேன், மறந்து போயிடும்! ஒருத்தன் ஆட்டோவை விட்டு எறங்கலை. பீடியோ, சிகரெட்டோ பத்த வெச்சுக்கிட்டு, 'நீ மொதல்ல போ. நான் யாராவது வராங்களான்னு பாக்கறேன்'னான். இவன் என்னைத்

தரதரன்னு இழுத்துக்கிட்டுப் போனான். சத்தம் போட்டாக் கத்தி வெச்சிருக்கேன், சீவிடுவேன்னான். கத்தியைக் காட்டினான். ஒரு சமயத்தில் பளபளன்னு இருந்தது. பயமா இருந்தாலும் ஊ ஊன்னு சத்தம் போட்டேன். 'யாராவது வாங்க'ன்னு கத்திப் பார்த்தேன். கன்னத்தில் அடிச்சுட்டான். மண்டபத்துக்குக் கொண்டு போய்க் கல்லில் உட்கார வெச்சு, முழங்காலை மார்ல கொடுத்து மடக்கிக் கைகட்டை விரலால கழுத்து நட்ட நடுவில வெச்சு அழுத்தி முழி பிதுங்கற மாதிரி பண்ணான். நான் அவனைக் கடிச்சேன். பட்டுன்னு பொட்டு உதர்ற மாதிரி அடிச்சான். அவனைக் கூப்பிட்டான்...''

''அம்ரு! ப்ளீஸ் அப்புறம் சொல்லும்மா, வேண்டாம்மா... சொல்ல வேண்டாம் ப்ளீஸ்!'' என்றார் டாக்டர் ராம்பிரகாஷ். அழாக்குறையாக, ''டான்ட் ஸ்டான்ட் இட் அம்ரு ப்ளீஸ்...''

''மிஸஸ் ராம்பிரகாஷ், அவங்க ஏதாவது பேர் சொல்லிக் கூப்பிட்டுக்கிட்டாங்களா?''

''குரு. குருன்னான்.''

''முகத்தைப் பார்த்தீங்களா இல்லை, குரல் கேட்டதா?''

''முகத்தைப் பார்க்கலை. குரல் சின்னப் பையன்னு தோணிச்சு!''

''எத்தனை வயசிருக்கலாம்னு தோணிச்சு?''

''இருபது.''

''ரெண்டு பேருக்குமா?''

''மற்றவன் வர்றதுக்குள்ள கார் வெளிச்



சம் பளிச்சுன்னு தெரிஞ்சப்ப பயந்துண்டு அவசர அவசரமா என் புடைவையெல்லாம்...''

''டோண்ட் அம்ரு, வேண்டாம், அப்புறம் சொல்லலாம், ஸார்...... சோமசேகர், என்ன இது அநியாயம்? அவளை விட்டுருங்க ஸார். அப்புறம் கேக்கலாம்!''

''ஸாரி! அவங்கதான் தகவல் சொல்லிக்கிட்டு இருக்காங்க.''

''நீங்க ஏன் என்னை விட்டுட்டுப் போயிட்டீங்க, ஏன்?'' என்றாள் ஆர்வத்துடன்.

அம்ரு இப்போது அவரைக் கன்னத்தை நிமிர்த்திக் கிட்டத்தில் உற்றுப் பார்த்தாள். கோரமாக அழுதாள், சப்தமில்லாமல் கொஞ்ச நேரம். அப்புறம் சப்தத்தோடு. அப்புறம் அடித் தொண்டையில் ஒரு மாதிரி பிளிறுவது போலப் பெரிசாக...

''அம்ரு, அம்ரு, காம் யுவர் செல்ஃப் அம்ரு!''

அவர் மார்பில் குத்தினாள். தன் நெஞ்சுக்குள் இருக்கும் மகா பெரிய துக்கச் சுமையை எப்படியாவது வீட்டுக்குப் போவதற்குள் வெளியே கொண்டு வந்துவிட வேண்டும் என்கிற வைராக்கியம் போல அழுதாள்.

ராத்திரி மூன்று மணி வரை அவளருகிலேயே அவர் வீற்றிருந்தார். கோபியும் சோமசேகரும் அவர்களை வீட்டில் விட்டு விட்டுப் புறப்படுகையில், ''புரொபஸர், கவலைப்படாதீங்க. காரை நாங்க கவனிச்சுக்கறோம். டோ பண்ண ஏற்பாடு செய்துடறோம். நீங்க எப்ப இவங்க உடல்நிலை சுமாராகிக் கேள்விங்களுக்குப் பதில் சொல்லக் கூடிய நிலையில் இருக்காங்களோ, அப்ப எனக்குச் சொல்லி அனுப்புங்க. அதுக்குள்ள நாங்களும் விசாரணையைத் தொடர்ந்து செய்கிறோம்... ஐயாம் வெரி ஸாரி.''

கோபி ராம்பிரகாஷின் கைகளைப் பற்றி, ''ராம், தைரியமா இரு'' என்றார். ''எனக்கு ரொம்ப ரொம்ப வருத்தமா இருக்குதுப்பா. கல்யாண ரிசப்ஷனின் போது, வாய் தவறி ஒரு வார்த்தை சொல்லிவிட்டேன். ஞாபகம் இருக்குதா?''

''இருக்குது'' என்றார் ராம்பிரகாஷ்.

''வெல். ஐயாம் எக்ஸ்ட்ரீம்லி ஸாரி, ராம். நான் ஒரு மடையன். உன் மனைவியை முதல்ல அத்தனை அழகாப் பார்த்த பிரமிப்பில் வந்த காட்டுத்தனமான வாக்கியம் அது. அதுக்காக அவமானப்படறேன்.''

''பரவாயில்லை. அது ஒண்ணும் எனக்கு இப்பப் பெரிய விஷயமாப் படலை!''

''ராம், சோமசேகர் பற்றித் தெரியாது உனக்கு. ரொம்பப் புத்திசாலியான போலீஸ் ஆபீஸர். அவர் நிச்சயம் குற்றவாளிங்களைக் கண்டுபிடிச்சு, உன் முன்னால நிறுத்தத்தான் போறார்!''

''ஸோ வாட்! அதனால இவளுக்கு ஏற்பட்ட குரூரமான அனுபவம் எந்த விதத்தில குறையறது கோபி?''



''தேர்தல் இப்போதைக்கு வரக் கூடாது!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''அப்பத்தானே நாம கூட வருங்கால முதலமைச்சர்னு சொல்லிக்கிட்டு இருக்க முடியும்!''

— சுடுவை கோபால்சாமி.

''இல்லை ராம், இதைப் பத்திக் காலேல பேசலாம், குட்நைட்!''

விளக்கை அணைப்பதற்கு முன், படுக்கையில் மருந்தின் உதவியால் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கும் மனைவியைப் பார்த்தார். ''அம்ரு'' என்று சன்னமாக அழைத்தார். நைட் பல்பைப் பொருத்திவிட்டு, ஒரு தம்ளர் தண்ணீர் அருந்திவிட்டுக் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். மூன்றரை.

சன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டே கிட்டே நாற்காலியை நகர்த்திக் கொண்டு உட்கார்ந்தார். அவள் கையைத் தம் இரண்டு கைகளின் இடையிலும் பத்திரப் படுத்தித் தடவிக் கொடுத்தார். கன்னத்தைத் தொட்டார்.

அவள் திடுக்கிட்டு எழுந்தாள். அந்த அரை வெளிச்சத்தில் என்ன தோன்றியதோ, ''வேண்டாம், வேண்டாம், தொடாதே! தொடாதே! வேண்டாம், தொடாதே!'' என்று அவர் கையை உதறித் தள்ளி, விருட்டென்று எழுந்து அறையின் மூலையில் போய்த் தரையில் குந்தி உட்கார்ந்து கொண்டு, தன்னை நத்தை போலச் சுருட்டிக் கொண்டாள், ''வேண்டாம், வேண்டாம்'' என்று அவள் குரல் நடுங்க......

''அம்ரு, பயப்படாதே. நானு, நானு, உன் புருஷன்!''

''என் புருஷன் என்னை விட்டுட்டான். என்னை விட்டுட்டுப் பஸ் ஏறிப் போயிட்டான். வேண்டாம், என்னை எதுவும் செய்யாதே! வேண்டாம், வேண்டாம், வேண்டாம்!''

''அம்ரு, அம்ரு'' என்று அவளைக் குலுக்கி, விளக்கைப் போட்டார். அவள் போட்ட அலறலில் எதிர் வீட்டு விளக்கு உயிர் பெற்றது. சன்னல் கதவு திறந்து, ''ஸம்திங் ராங் ப்ரொபஸர்?'' என்று கேள்வி

கேட்டது.

"ஓ. நத்திங்! உடம்பு சரியில்லே!"

"ஏதாவது ஹெல்ப் வேணுமா?"

"வேண்டாம் ப்ளீஸ்."

"ராத்திரி போலீஸ் வந்தாப்பலஇருக்கே?"

"காலையில் சொல்றேன் ப்ளீஸ். நீங்க தூங்கப் போங்க."

"அம்ரு. பாரும்மா, நான்தான் ராம் பிரகாஷ். ராம் பிரகாஷ். ராம்! ப்ரொபஸர்!"

அவள் தலையைத் தடவிக் கொடுக்க முற்பட்ட கையைப் பிடுங்கி அதை வலிக்குமாறு வளைத்தாள். "தொடாதே, தொடாதே" என்று அலறினாள். "அய்யோ, இல்லேம்மா, இல்லேம்மா!" என்று கையை விடுவித்துக் கொண்டார்.

அம்ரு மறுபடி தன்னைச் சுருட்டிக்கொண்டு தரையில் படுத்தாள். ராம் பிரகாஷ், செய்வதறியாமல் திகைத்தார். சற்று நேரத்திற்குப் பின் போன் புத்தகத்தை எடுத்து, டாக்டர் பத்மினி ராஜின் நம்பரைப் பார்த்துச் சுழற்றினார். பலமுறை அடித்தபின் ஒரு தூக்கக் குரல் "ஹலோ" என்றது, அலுப்புடன்.

"டாக்டர் பத்மினி இருக்காங்களா?"

"தூங்கறாங்க. நீங்க யாரு?"

"ராம்பிரகாஷ்னு சொல்லுங்க!"

"அவங்களை இப்ப எழுப்ப முடியாதுங்க. ராத்திரி பேஷண்டைப் பார்த்துட்டு இப்பத்தான் பத்து நிமிஷம் முன்னாடி படுத்தாங்க. எழுந்ததும் உங்க பேர் சொல்றேன். மெஸேஜ் கொடுக்கறேன்..."

இப்போது கூட அம்ரு லேசாக "வேண்டாம், தொடாதே" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்.

சற்றுநேரத்துக்குப்பின் முழுவதும்தூங்கிப் போன பின்னும் அவளை நகர்த்தப் பயப்பட்டார். அந்த இடத்திலேயே மின்விசிறியை அமைத்துப் போர்த்திவிட்டுச் சூரியன் வரக் காத்திருந்தார்.

**எ**ப்போது தூங்கிப் போயிருப்பாரோ, தெரியவில்லை. டெலிபோன் மணி அடித்து எழுந்தார், எத்தனை மணி? என்ன இடம்? எதுவும் தெரியாமல், "டாக்டர் ராம் பிரகாஷ்?"

"ஸ்பீக்கிங்!"

"நான் வர்ஷா பேசறேன்."

"எஸ் வர்ஷா!"

"கோபி இப்பத்தான் சொன்னார். டாக்டர், ஐயாம் வெரி வெரி ஸாரி. உங்க மனநிலை எப்படி இருக்கும்னு என்னால நினைத்துக் கூடப் பார்க்க முடியலை. இந்த மாதிரி சமயத்தில நீங்க தனியா இருக்கக் கூடாது. உங்களுக்கு ஆறுதல் சொல்ல யாராவது பக்கத்தில் இருந்தாகணும். டாக்டர், நான் உங்க வீட்டுக்கு வரலாமா?"

"வர்ஷா, வேண்டாம். ஐயாம் நாட் இன் எ மூட்!"

"நான் நிச்சயம் வர்றேன் டாக்டர்."

"வர்ஷா ப்ளீஸ்! வேண்டாம். ஐ கேன் மேனேஜ்!"

போனை வைத்துவிட்டாள். டாக்டர் பெருமூச்சு விட்டார். திரும்பிப் பார்த்த போது, அம்ருவின் உதடுகள் லேசாக முணுமுணுத்துக் கொண்டிருந்தன.

அருகில் போய் அவள்மேல் படாமல் குனிந்து அவள் சொல்வதைக் கேட்டார்.

"ஏஸிடி, ஏஸிடி!" என்றாள்.

(தொடரும்)

"வீடு, மனைவி, மக்களைத் தொடர்ந்து, அரசியல் படம் ஒண்ணும் எடுக்கப் போறீங்களாமே, படத்துக்குப் பேரு என்ன?"

"ஒன்ன வீடு, மனைவி, மக்கள்!"

— சேத்தூர் அன்பழகன்.





"மாப்பிள்ளை ரொம்ப முன் ஜாக்கிரதைப் பேர்வழி. நீங்க தைரியமாப் பெண் கொடுக்கலாம்...!"

"எதை வச்சுச் சொல்றீங்க?"

"கைவசம் எப்பவும் ஒரு முன் ஜாமீன் வச்கட்டே அலைவாருன்னுப் பார்த்துக்குங்களேன்...!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# கல்கி விடுமுறை மலர் 1988



* டிஸ்னி உலகில் ஒரு காட்சி.

வண்ணங்களில் —

* எஸ். பி. பாலசுப்பிரமணியம்; சௌராஷ்யா
* ஆழ்கடல் அற்புதங்கள்
* கார்த்திக்; மீனாட்சி சேஷாத்திரி
* வைஷ்ணவி தேவி யாத்திரை.
* ரமேஷ் கிருஷ்ணன்; சீத் சேத்தி
* நாகாலாந்து காட்சிகள்.
* அலெக்ஸாந்தர்; மூப்பனார்
* குடை விரிக்கலாம்; காற்றில் மிதக்கலாம்!
* பி. ஸி. சொர்க்காரின் மந்திர ஜாலம்
* திருவிடைக்கழி முருகன்; தெய்வயானை.
* செல்லப்பன் — அரஸ்: நகைச்சுவை ஓவியங்கள்
* டிஸ்னிலாந்து
* கோகுலம் பக்கங்கள்
* இயற்கைக் காட்சிகள்
* மற்றும் ஏரான உள்நாட்டு, அயல்நாட்டுப் பயணக் கட்டுரைகள்; சிறுகதைகள்; இரண்டு நாவல்கள்.

320 பக்கங்கள் :: விலை ரூ. 10/—.

* ஜூன் முதல் வாரத்தில் கிடைக்கும்.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது பதிவுத் தபாலில் பெற ரூ. 15 அனுப்பவும்.

மானேஜர், கல்கி, சென்னை—600 032



* 'பேகாரி ஹடாவ்'



* ஹிந்துஜாவில் இருக்கிறாரே?'

* ஏ. பாலச்சந்திரன், கே. வி. குப்பம்.*

? ராஜீவின் புதிய முழக்கமான 'பேகாரி ஹடாவ்' குறித்து?

! கரீபி ஹடாவ் (ஏழைமையை ஒழிப்போம்) என்பது அம்மா கண்டுபிடித்த தேர்தல் தந்திரம். பேகாரி ஹடாவ் (வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்போம்) என்பது மகன் கண்டுபிடித்த தேர்தல் தந்திரம். சுதந்திரம் பெற்று நாற்பதாண்டுகள் சென்று'' இன்னும் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படைத் தேவையான மின் உற்பத்தியில் தன்னிறைவு காணாத போது வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதாவது? முழக்கத்தோடு சரி!

* ஆர். அப்துல்சலாம், திருச்சி — 20.

? ரூபாய் ஐம்பதாயிரத்தை டெபாசிட் செய்தால் உடனடியாக டெலிபோன் இணைப்பு வழங்கப்படும் என்று ஒரு திட்டத்தை மத்திய அரசு கொண்டு வந்திருக்கிறதே?

! 'அப்படி வாங்கும் பணத்தைக் கொண்டு சாதாரண மக்களுக்கான டெலிஃபோன் வசதிகள் செய்யப்படும்' என்று அரசு கூறியிருப்பதில் எந்தத் தவறும் இருப்பதாகப் படவில்லை. சொன்னதை நிறைவேற்ற வேண்டுமே என்ற கவலை மட்டும் இருக்கிறது!

* எஸ். ராஜா, சென்னை — 23.

? 'பத்திரிகை சுதந்திரத்திற்கு ஊறு விளைவிக்க மாட்டோம்' என்று கூறிவரும் மத்திய அரசு தினமணி நாளிதழ் பெங்களூர்ப் பதிப்புக்கான ஃபாக்ஸிமிலி தொடர்புக்குக் கடைசி நிமிடத்தில் அனுமதி மறுத்தது ஏன்?

! இதுபோன்ற சிறுபிள்ளைத்தனமான காரியங்களால் ராஜீவ் அரசு கெட்ட பெயரைச் சம்பாதித்துக் கொள்வதைத் தவிர வேறு ஒன்றையும் சாதிக்கவில்லை.

* எஸ். ராஜகோபாலன், திருக்கோவலூர்.

? போஃபர்ஸ் விவகாரத்தில் ஆலடி அருணா இன்று அறுபதடி அருணாவாக உயர்ந்து கேள்விக் கணைகளைத் தொடுத்திருக்கிறாரே?

! இந்த அறுபதடி உயர தைரியம் எப்படி வந்தது? எம். ஜி. ஆர். இல்லாததாலா அல்லது ஜானகி ஆட்சிக்கு இ. காங்கிரஸ் ஆதரவு தராததாலா? இந்தச் சந்தேகத்தை அவரிடமே நமது நிருபர் கேட்டார். அதற்கு, ''நான் புரட்சித் தலைவர் அவர்கள் உயிரோடிருந்த போதே பாராளுமன்றக் கூட்டுக் குழுவின் உறுப்பினர் என்ற முறையில் சாட்சிகளைக் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டுத் திணறச் செய்தேன். அது பற்றி நட்வர்சிங் புரட்சித் தலைவரிடமே வந்து புகார் செய்தார். ஆனால் புரட்சித் தலைவர் அந்தப் புகாரைக் கண்டுகொள்ளவேயில்லை! மேலும் தேர்தலில் நாம் உறவு கொள்ள வேண்டிய நிலை வந்தாலும் வரலாம் என்றும் மறைமுகமாகக் காங்கிரஸார் என்னை மிரட்டினார்கள். அதற்கு நான் அவர்களிடம், 'நீங்கள்

**ஆலடி அருணா அறுபதடி அருணாவாக உயர்ந்திருக்கிறாரே?**

மட்டும் எங்கள் முதுகில் அவ்வப்போது குத்துவீர்கள்; நாங்கள் அதையும் தாங்கிக் கொண்டு உங்களுக்கு விசுவாசமாக இருக்க வேண்டுமா? மேலும் இது உண்மையைக் கண்டறியப் போடப்பட்ட குழு. இங்கே கட்சிக் கண்ணோட்டம் கூடாது' என்று பதிலடி தந்தேன்...'' என்று பதில் கொடுத்திருக்கிறார் அருணா. இருப்பினும் ஜானகி அமைச்சரவைக்குக் காங்கிரஸ் ஆதரவு கொடுத்திருந்தால் ஆலடி அறுபதடியாகியிருக்க மாட்டார் என்பதே என் கருத்து!

* டி. தாழை பிரபு, குடியாத்தம்.

? மஹாராஷ்டிர முதல்வர், காமராஜர் நகரில் நடந்த காங்கிரஸ் மாநாட்டுக்குப்



* நல்ல முன் உதாரணம்

* அ. பி. தனம்



பிரதமரோடு ரயிலில்சென்றபோது டிக்கெட் எடுத்துக் கொண்டு சென்ருராமே?

! உண்மையில் அவருடைய செயலை ஒரு 'நாடகம்' என்று ஒதுக்கிவிட முடியாது. அனைவரும் பின்பற்ற வேண்டிய நல்ல முன் உதாரணமே அது.

* இடலை. சுதா, குளத்தூர்.

? 'இலங்கைப் பிரச்னையை ராஜீவ் தமது கௌரவப் பிரச்னையாகக் கருதுகிருர். அதனுல்தான் அப்பிரச்னை தீர்க்கப்படுவதில் தாமதம் ஏற்படுகிறது' என்ற கருணநிதியின் கருத்து பற்றி?

! அதில் ஒரு பாதிதான் உண்மை. 'பிரதமரைப் போலவே விடுதலைப் புலிகளும் இலங்கைப் பிரச்னையைத் தங்கள் கௌரவப் பிரச்னையாகக் கருதுகிருர்கள்; அதனுல் தான் இத்தனை தாமதம்' என்று கருணநிதி



மறுபாதி உண்மையையும் சேர்த்துக் கொண்டிருக்க வேண்டும்.

* சண்பை சி. சண்முகம், சீர்காழி.

? சென்னையில் நடந்த ஆட்டோ ஸ்டிரைக் பற்றி?

! பல்லவனின் 'வி' மற்றும் 'ஜெ' சர்விஸ் பஸ்களால் ஆட்டோ ஸ்டிரைக் என்பது வெறும் புஸ்வாணமாகிவிட்டது என்பதே உண்மை. குறிப்பாக எழும்பூர், சென்ட்ரல் ரயில் நிலையங்களில் பயணிகள் ஆட்டோ இல்லாத குறையை உணராதபடி பல்லவன் கவனித்துக் கொண்டது. ஆட்டோ ஓட்டுனர்கள் பொது மக்களின் அனுதாபத்தைத் தாங்கள் இழந்து நிற்பதைப் புரிந்துகொண்டு அதற்கான காரணங்களைச் சுயவிமர்சனம் செய்து ஆராய்வது நல்லது.

* ஜெ. பிஸ்மி, திருத்துறைப்பூண்டி.

? திருச்சியிலிருந்து வேதாரண்யம் சென்ற உப்புச் சத்தியாக்கிரகப் பாதயாத்திரையினர் எங்கள் ஊரைக் கடந்து சென்றபோது, சுமார் மூன்று மணி நேரம் போக்குவரத்தை நிறுத்தி, வாகனங்கள் செல்லாமல் தடுத்துச் சாலையோரக் கடைகளையெல்லாம் இடித்துத் தரைமட்டமாக்கிச் சாலையோரத்தில் தொழில் செய்து கஷ்ட ஜீவனம் நடத்துபவர்களின் வயிற்றில் அடித்து ... பாதயாத்திரைசென்றவர்களுக்குவசதிசெய்துகொடுத்



தனர். என் கேள்வியெல்லாம் இதுதான்: பொது மக்களின் மாமூல் வாழ்க்கையைப் பாதிக்கும் வகையில் நடத்தப்பட்ட இந்த யாத்திரைதேவைதானு? இதற்கும்எதிர்க்கட்சிகள் நடத்தும் 'பந்த்'திற்கும் அதிக வித்தியாசமில்லையே? இது எப்படி 1930 — ஆம் ஆண்டு நடத்தப்பட்ட உப்புச் சத்தியாக்கிரகத்தை நினைவுபடுத்தும்?

! உங்கள் கேள்வியிலேயே அதற்கான பதிலும் விளக்கமாக அடங்கியிருக்கிறதே. அப்புறம் என்ன?

* என். தீனதயாளன், அயன்புரம்.

? ஜெயலலிதா நாட் அவுட் ஆவாரா? க்ளீன் போல்ட் ஆவாரா?

! முதலில் அவர் பேட் பிடிக்கக் கற்றுக் கொள்ளட்டும். பிறகு பார்ப்போம்.

* சுமாலி, மேலப்பாலையூர்.

? ஏ. பி. வெங்கடேஸ்வரன் தூய்மையானவர் என்றீரே... அவர் ஹிந்துஜாவில்தானே உள்ளார்?

! அரசாங்கத்தில் எத்தனையோ முறைகேடுகள் நடக்கின்றன என்பதால் அரசாங்கத்தில் பணியாற்றுவோர் எல்லாரும் வேலையை விட்டுவிட்டு வந்துவிட முடியுமா? தம் வரையில் நேர்மையைக் கடைப்பிடிப்பதுதான் முக்கியம். அதேபோல் ஹிந்துஜா அறக்கட்டளைக்குஏ. பி. வெங்கடேஸ்வரன் தலைவராக இருக்கிருர். அவர் வரையில் அவர் ஒழுங்காக இருக்கிருரா என்றுதான் பார்க்க முடியும். நேர்மைக் குறைவாக அவர் நடந்து கொண்டதாக எப்போதாவது தெரிய வந்தால் கண்டித்து விட்டுப் போகிறேம்; அதில் என்ன தயக்கம்!

* பாக்கியமுத்து, திருச்சி — 20.

? நுழையும் போதே ஜெத்மலானியின் குரல்ஒடுக்கநடவடிக்கைஎடுக்கப்படுகிறதே?

! அரசியல் சாசனத்தின் பேரில் விசுவாசப் பிரமாணம் எடுக்க வேண்டிய அவர், 59 வது திருத்தம் பற்றி அப்போது பேசியது அ. பி. தனமே. அதை விமர்சிக்க வேண்டிய தருணம் அது அல்ல.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

ஏ. பாலசந்திரன்,
1/34, பிராமணர் தெரு,
கே. வி. குப்பம், வ. ஆ. (மா. வ.),
— 632 201.

## வட்டமேஜை

* மறைமலை நகரில் நடைபெற்ற இ. காங்கிரஸ் மாநாடு பற்றிய தலையங்கம் படித்தேன். சட்டத்தை மீறி நடைபெற்ற பல காரியங்களை கவர்னரால் தடுக்க முடியவில்லை. ஆனால் கட்சியின் மனம் கோணும்படி நடந்து கொண்டால், என்ன பரிசு கிடைக்கும் என்பதை, முந்தைய கவர்னர் குரானா அகற்றப்பட்டதிலிருந்தே இவர் நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பாரே! தலையங்கத்தின் கடைசியில் தமிழக மக்களின் இரண்டு எதிர் பார்ப்புக்களை வெளியிட்டிருக்கிறீர்கள். கலைஞர் தம் போட்டி ஊர்வலத்தை ரத்து செய்து விட்டார். காங்கிரஸ் தான் தேர்தலில் தனித்துப் போட்டியிடுமா, என்பதைச் சொல்லாமல், வழக்கம் போல மழுப்பிக் கொண்டு நிற்கிறது!

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

* தங்களது தலையங்கம் பாராட்டத்தக்கது. மறைமலை நகரில் நடந்த அதிகார துஷ்பிரயோகமும், பணச் செலவும் கண்டிக்கத் தக்கவை! இவ்வளவு நாட்களாக நடுநிலைமையோடு செயல்பட்ட கவர்னர், இந்த விஷயத்தில் கொஞ்சம் சறுக்கி இருப்பது, ஏனோ மன வருத்தத்தைத் தருகிறது. சம்பந்தப்பட்டவர்களுக்குத் தங்களது நடுநிலைமையான தலையங்கம் நல்ல சாட்டையடி கொடுத்திருக்கிறது. பாராட்டுக்கள்.

விருத்தாசலம். — 1. கெ. குருராசன்.

[redacted]

# கோடையிலும் மழை பெய்யக் காரணம்...

[redacted]

* "பறக்கும் நேரத்தைப் பணியச் செய்யுங்கள்" — தேவையானதொரு பேட்டிக் கட்டுரை. 'நேரமே கிடைப்பது இல்லை' என்னும் பொதுவான பதிலுக்குப் பொருத்தமான வழியைச் சொல்லி இருக்கும் விதம் வரவேற்கத் தக்கது; நடைமுறைக்கு ஒத்து வருவது.

பெங்களூர் — 21. ப. மூர்த்தி.

* பிட்ரோடாவுடன் கண்ட பேட்டி சிறப்பாக இருந்தது. அவர் கூறியிருக்கும்படி 1990க்குள் எல்லாக் கிராமங்களுக்கும் குடிநீர் வசதி செய்து கொடுக்கப்பட்டு விட்டால் மக்கள் வாழ்த்துப் போவது நிச்சயம். செய்கிறார்களா என்று பார்ப்போம்!

சென்னை — 33. வி. எஸ். வாசன்.

* காசோலையை நீட்டி, விரும்பிய தொகையை எழுதிக் கொள்ளலாம் என்று கூறிய பிறகும் அதை உதறித் தள்ளி விட்டுத் தம் நாடான இந்தியாவில், தாம் பிறந்த கிராமத்திற்குப் பணியாற்ற வந்த பரமேஸ்வரர் போன்றவர்களால்தான் இந்தக் கடும் வெயிலிலும் அவ்வப்போது மழை பெய்கிறது போலும்!

சென்னை — 39. பா. எழில் முருகன்.

* மூப்பனாரைப் பற்றி அறியப் பல விஷயங்களைக் கூறி இருப்பது நல்லதுதான்... அதே நேரத்தில் சில விஷயங்களைக் கற்பனையுடன் சேர்த்து விளையாடி இருப்பது ஜீரணிக்கக் கஷ்டமாக இருந்தது.

சென்னை — 11. வண்ணை கணேசன்.

* ஜெயமோகன் எழுதிய 'பண்ட மாற்று' சிறுகதை, இளம் தம்பதியரின் ஊடலை வெளிப்படுத்திக் காட்டியது. சிறுகதைக்குச் சிறப்பாகப் புகைப்படம் எடுத்த கே. வி. ஆனந்த் பாராட்டப்பட வேண்டியவர்.

மதுரை — 1. எஸ். மூர்த்தி.

* கடந்த மார்ச் '88, "ரீடர்ஸ் டைஜெஸ்ட்"ல் வந்த 'Life's like that' என்ற துணுக்கொன்றின் அப்பட்டமான மொழி பெயர்ப்பே 'பண்டமாற்று!' என்னும் சிறுகதை! ஒரேயொரு வித்தியாசம்: துணுக்கில் 'ஐ லவ் யூ' எழுதுவது கணவன். கதையில் அதை எழுதுவது மனைவி.

மதுரை — 10. நூர்.

* கல்கி 'தமிழக முன்னேற்றத் தொழில் மலர்' மிகவும் நன்றாக இருக்கிறது. பல்வேறு தொழில்களைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. ஒன்றுமில்லாத நிலையிலிருந்து கோமன்வரர்களான தொழில் ஜாம்பவான்களைப் பற்றியும் அறிந்து கொண்டது மனத்துக்கு மிகவும் சந்தோஷம் அளித்தது. நம் மக்கள் எல்லா நலனும் பெற்று நம் மாநிலம் முன்னுக்கு வரவேண்டும் என்று விரும்பும் தேச பக்தியுள்ள ஒவ்வொரு குடிமகனும் மகிழ்ந்து போற்றும்படி அமைந்திருக்கிறது மலர். எவ்வளவு தூரம் பின்தங்கியிருக்கிறோம் என்பதையும் எடுத்துக் காட்டிப் பெருமூச்சுவிடச் செய்திருக்கிறீர்கள். அருமையான மலர். வாழ்க, தொடர்க, தங்கள் பணி.

திருச்சி. முத்துலட்சுமி நடராஜன்.

* "ஜாதி ஒழிப்பு — புதிய பார்வை" என்ற தலைப்பில் 'ஒரே ஒரு கிராமத்திலே' என்ற சினிமாப் படத்தின் விமர்சனத்தை எழுதி இருக்கிறீர்கள். அதில், 'இன்று ஒரே ஒரு கிராமத்திலே படத்தைத் தடை செய்யக் கோரி இருப்பவர்களில் அம்பேத்கார் மக்கள் இயக்கத் தலைவர் பாலசுந்தரமும் ஒருவர்' என்று எழுதி இருக்கிறீர்கள். இது முற்றிலும் தவறான செய்தியாகும். என் சார்பில் அந்தப் படத்தை எதிர்த்து வழக்கு ஏதும் பதிவு செய்யவில்லை என்பதைத் தெரிவிக்கிறேன்.

சென்னை — 17. வை. பாலசுந்தரம்.

('ஒரே ஒரு கிராமத்திலே' திரைப்படத்துக்குப் பகிரங்க எதிர்ப்புத் தெரிவித்துள்ளவர்களுள் ஒருவர் வை. பாலசுந்தரம் — என்று படத் தயாரிப்பாளர் தெரிவிக்கிறார். கட்டுரையில் வழக்குத் தொடுத்தவர்களில் ஒருவராகக் குறிப்பிடப்பட்டிருப்பது தவறே.

— ஆசிரியர்.)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

Registered as a Newspaper in Sri Lanka

# பாசமுடன் படைக்குது பாண்ட்ஸ்

# POND'S




உங்கள் பாப்பாவுக்கு—பாண்ட்ஸ் பாசப் பெருக்கு ஒப்பில்லா உருவம் எடுத்து விளையாட வந்திருக்கு: கொஞ்சுமழகு பொம்மைக் கரடி வடிவிலே பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர், ஸ்பெஷல் பேபி சோப். இதயத்துப் பாச மலர்கள் இரண்டு: பாண்ட்ஸ் கருத்த் தரம் உரைக்கும் படைப்புகள்—அத்தனையும் தூய்மை, முத்தான முழுமை. உங்கள் குஞ்சுப் பாப்பாவின் மழலைக்கு மழலை பேசி பிஞ்சுடலிலே கொஞ்சி விளையாடும் மென்மை நாளெல்லாம்—முத்தமாரி பொழியத் திகட்டாத பூமென்மை. பூரணமாய் நம்புவீர்: பூப்போல மேனி தழுவி உங்கள் பாப்பாவைக் காப்பது பாண்ட்ஸ்.

## பாசத்தால் அரவணைப்பீர் உங்கள் பாப்பாவை

POND'S

## பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர் மற்றும் சோப்

Creative Unit 6982 Tam.